# நாகம்மாள்

தேர்ந்தெடுக்கப்பட்ட நாவல்

க.பொ.த.(உ.த)

ஆர். ஷண்முகசுந்தரம்



# நாகம்மாள்

தேர்ந்தெடுக்கப்பட்ட புனைகதை இலக்கியம்

நாவல்

க.பொ.த. [உயர்தரம்]

ஆர். ஷண்முகசுந்தரம்

க.பொ.த. [உயர்தரம்]
புதிய பாடத் திட்டத்திற்கு அமைய
நடைமுறைப் படுத்தப்படும்
பாடநூல்களுள் [தமிழ் – I] இந்நூலும்
ஒன்றாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது.




வெளியீடு :
தென்றல் பப்ளிகேஷன்,
கொழும்பு - 6.

RS. 100/-

# நூல் விபரம்


| | | |
|---|---|---|
| தலைப்பு | : | **நாகம்மாள்** |
| இலக்கிய வகை | : | புனைகதை இலக்கியம் : நாவல் |
| ஆசிரியர் | : | ஆர். ஷண்முக சுந்தரம் |
| போலாக்க ஆலோசனை தொகுப்பு | : | இ.க.சிவஞானசுந்தரம், M.A. |
| எமது மீள்பதிப்பு | : | 2002 வைகாசி 20 |
| நூல் அச்சுக் கோப்பு | : | மாணவர் மறுதோன்றி மையம்<br>சென்னை – 600 001.<br>T.P. 5382513 |
| அட்டை வடிவமைப்பு | : | **New Print Process**<br>Chennai - 600 005<br>T.P. 8550287 |
| வெளியீடு | : | தென்றல் பப்ளிகேஷன்,<br>கொழும்பு – 6. |

# நாகம்மாள்

## 1

சந்தைக் கூட்டம் மெதுவாகக் கலைய ஆரம்பித்தது. சோளத் தட்டுக்களைக் கடித்து அசைபோட்டுக் கொண்டிருந்த காளைகள் மணிகள் ஒலிக்க எழுந்து நின்று வண்டியில் பூட்டத் தயாராயின, சக்கரத்தடியிற் கிடந்த சாக்குகளை எடுத்துச் சிலர் தட்டினர். வாங்கிவந்த சாமான்களை வண்டியிற் சிலர் ஏற்றிக்கொண்டிருந்தார்கள். சந்தைக்குள்ளே நிழலுக்காக முளையடித்துக் கட்டியிருந்த துணிகளையும், விற்பதற்குப் பரப்பியிருந்த பண்டங்களையும் அவரவர் பரபரப்பாக எடுத்தனர். பெண்களும் ஆண்களும் தங்கள் தங்கள் கிராமத்துப் பாதை வழியே வேகமாக நடக்கலானார்கள். இரண்டோரு உள்ளூர்க்காரச் சிறுவர்களும் அங்குமிங்கும் எதையோ தேடுவதைப்போல் திரிந்துகொண்டிருந்தார்கள்.

வெங்கமேட்டில் வாரத்துக்கு ஒருமுறை புதன்கிழமை சந்தை கூடும், சுற்றுவட்டாரத்துக்குச் சுமார் பத்து இருபது கிராமத்தவர்கள் வீட்டுச் சாமான்கள் வாங்குவதற்கு இங்குதான் வருவது வழக்கம். உப்புத்தொட்டு கற்பூரம் வரை சாதாரணமாக எல்லாச் சாமான்களுமே அங்கு கிடைக்கும். அந்தப்பக்கத்துக்கே பெரிய சந்தை அதுதான்.

பிரதிவாரமும், “எனக்கு முந்தி, உனக்கு முந்தி” என்று பொழுது சாய்வதற்கு முன்பே சகலரும் பயணம் கட்டிவிடுவார்கள். ஆனால், இந்த வாரம் “சிவியார் பாளையத்தில்” சாமி சாட்டியிருந்ததால் சந்தையிற் கூட்டம் அதிகமானதோடு, இருட்டும்வரை அவர்கள் ஊர் போவதையே மறந்து வியாபார முசுவில் நேரம் பண்ணிக் கொண்டிருந்து விட்டார்கள்.

வெங்கமேட்டிற்கு மேற்கில் மூன்றாவது மைலில் இருக்கிறது சிவியார் பாளையம். ஆற்றுப்பாசனம் அதிகமில்லாவிட்டாலும் நீர் கொழிக் கும் ஊர் அது. தோட்டக் கிணறுகளில் எட்டித்தொடுமளவு தண்ணீர்

எந்தக் காலத்திலும்; ஊரைச் சுற்றி பூக்குலுங்கும் பசுமையான மரங்கள்; கண்ணுக்கினிய காட்சிகளே நாலா பக்கங்களிலும் நிறைந்திருந்தன. வறட்சி என்பது அங்கு வெகு தூரத்துக்கில்லை.

சிவியார் பாளையத்திலிருந்துதான் இன்று அனேகர் வந்திருந் தார்கள். பொங்கல் கொண்டாடப்போகும் ஆனந்தத்தில் வெகு குதூகல மாகச் சம்பாஷித்துக்கொண்டே அவர்கள் நடந்தார்கள்.

அவர்கள் போய்க்கொண்டிருந்த இட்டேறி மிகக்குறுகலானது. அதோடு குண்டு குழி நிறைந்து கரடுமுரடானது. இந்தத் தடத்தில் நல்ல பழக்கமில்லாது புதிதாக நடப்பவர்கள் அதுவும் அந்த மசமசப்பான நேரத்திலே, ஒருஎட்டு அப்பாலே எடுத்து வைக்கமுடியாது. வேண்டுமென்று நாம் ஒருநாளைக்கு அந்தக் கஷ்டமான பரீட்சையில் இறங்கினாலும் கல்லும் முள்ளும் நம் பாதத்தைப் பதம் பார்க்காது விடமாட்டாது. இப்படிப்பட்ட இக்கட்டான பாதையில் அப்பெண்கள் எளிதாகச் செல்வதைப் பார்த்தால் நமக்கெல்லாம் ஆச்சரியமாகத்தான் இருக்கும். வரிந்து கட்டின மாராப்புச் சேலையுடன் நேராக, நிமிர்ந்து தலையில் வைத்திருக்கும் கூடை விளிம்பில் இருபக்கங்களையும் உயர்த்திப் பிடித்து ஒய்யாரமாக அவர்கள் பேசியவாறே சென்றனர். வரிசையாக ஒருவர்பின் ஒருவராக எறும்புச் சாரைபோல் அவர்கள் போகும் தினுசு வெகு அழகாயிருந்தது.

அப்போது மணி அடித்ததுபோல் ஒருகுரல் எழுந்தது. முன்பின் போகிற பத்து, முப்பது பேரும் "கப்" பென்று பேச்சை விட்டனர். "நா எல்லா வாங்கியும் ஒண்ணே மறந்திட்டனே!" என்று கணீரெனும் ஒரு குரல் எழுந்தது.

யாரிந்த வெண்கலத் தொண்டையில் பேசியது, பெண்ணுக்கா பிரமன் இவ்விதமான குரல் மகிமையை அளித்தான். இந்தப் பெண் நாகம்மாள். கணவன் இறப்பதற்குப் பத்துவருஷத்துக்கு முன்பிருந்தே ஒரு ராணி போலவே நடந்து வந்திருக்கிறாள் என்றும், பிறருக்கு அடங்கி நடக்கும் பணிவும், பயமும், என்னவென்றே அவள் அறியமாட்டாள் என்றும் இப்போது குறிப்பிட்டாலே போதும்.

“இந்தப் பாழாப்போன ஊட்டிலே நா நெனச்சுப்பாத்து ஒண்ணு வாங்கினா உண்டு. இல்லாட்டி நாளைக்கி இதேங்கிற சமயத்திலெ அதுக்கா வண்டிகட்டிக்கிட்டுப் போறது” என்றாள் நாகம்மாள்.

அது என்ன? எதை மறந்துவிட்டாள் என்பதைக் கூடக் கேட்காமலே இரண்டொருத்தி “ஆமாம்” என்று ஆமோதித்தனர். ஒருவேளை என்ன வென்று விசாரித்தால் “கொட்டைப்பாக்கில் சின்னரகம் வாங்காதது” போன்ற பதில் கிடைக்கும் என்பது அவர்களுக்குத் தெரிந்திருந்தது போலும்!

இந்தச் சங்கதி ஒன்றும் காதில் போட்டுக்கொள்ளாது தன்பாடு பரப்பைப் பற்றியே யோசித்துக் கொண்டுவந்த ஒருபெரியவள், “அந்த வெந்தயக்காரன் அரைக்காசுசொல்லி மூணரைத் துட்டுக்குப் போட்டானே! நான் மூணு துட்டுக்கே கேக்காது போனம் பாத்தியா?” என்று தனக்குத் தானே வாய்விட்டுச் சொல்லிக் கொண்டாள்.

அதைக்கேட்கவும் நாகம்மாள் கூடச் சிரித்து விட்டாள்.

“எல்லாம் இப்படித்தான் ஏமாந்தா தலையிலே கல்லைப் போடற நாளாகத்தான் இருக்குது, யாரை நம்பரது? யாரை உடர்ரது?” என்று உபதேசம் செய்யும் பாணியில் ஒருத்தி தொடங்கினாள்.

“தூர ஏம்போவோணும்?” என்று நாகம்மாள் தனக்கு முன் சொல்லியவளின் பேச்சை அங்கீகரிக்கும் விதமாய் “என்னையே எடுத்துக் குவோம்” என்று ஆரம்பித்தவள் ஏனோ சடக்கென, உதட்டைக் கடித்துக் கொண்டு நிறுத்திவிட்டாள்.

இந்தச் சமயத்தில் பக்கத்துக் கிழுவமர வேலியைத் தாண்டி நாலைந்துபேர் ஓர் முயலைத் துரத்திக் கொண்டு ஓடிவந்தார்கள். திடுதிடு வென வருவது யாரெனத் தெரியாமல் இரண்டொரு பெண்கள் சத்தமிட்ட னர். நாகம்மாள் போகின்றவர்கள் ‘அட, மொசல் எந்தச் சந்திலே போச்சோ! இங்கே ஏ வந்து இப்படி ஏறறீங்க’? என்று கூறவும், சந்தடி மட்டுப்பட்டது. ஓடிவந்த ஆட்களும் ஏமாந்த முகத்தோடு நின்று விட்டார்கள்.

இக்காட்சிக்குப் பின்னர் முயல்களைப்பற்றி அங்கு கிளம்பிய கதைகளெல்லாம் நமக்கு வேண்டாம். எப்படியோ ஊர்வந்து நாகம்மாளும் தன் வீடுபோய் 'ச்சோ' வென்று சலிப்போடு திண்ணையில் கூடையை இறக்கிவைத்தாள். கீழ் வானில் நிலவும் பூத்தெழுந்தது.

## 2

நாகம்மாளின் நான்கு வயதுக் குழந்தை முத்தாயா நிலா வெளிச்சத்தில் வாசலில் விளையாடிக் கொண்டிருந்தாள். தன் தாயைக் கண்டவுடன் "எனக்கு என்னம்மா வாங்கியந்தே?" என்று கேட்டுக்கொண்டே ஓடிவந்தாள்.

முத்தாயாளுக்காக எத்தனையோ சாமான்கள் தாயார் வாங்க வந்தாள். பழம் பொரிகடலை, முறுக்கு, மிட்டாய் முதலிய தின்பண்டங்கள். ஆனால் நாகம்மாள் இப்போது அவைகளையெல்லாம் எடுக்காமல் மேலேயிருந்த முறுக்கை மட்டும் ஒடித்துக் குழந்தையிடம் கொடுத்தாள். முறுக்கைப் பார்க்கவும் குழந்தைக்குப் பரமானந்தம் உண்டாயிற்று. அதைக் கடித்துக்கொண்டு ஆனந்தக் கூத்தாடியதால் பாதிமுறுக்குக் கைநழுவிக் கீழே விழுந்ததுகூடக் குழந்தைக்குத் தெரியவில்லை. "உங்க சின்னையன் இன்னும் வல்லயா? " என்று நாகம்மாள் தன் மகளிடம் கேட்டாள்.

அப்போது குழந்தைக்கு இருந்த சந்தோஷத்தில் சின்னையனே எதிரில் வந்திருந்தாலும் கண்ணெடுத்துப் பார்த்திருக்குமா என்பது சந்தேகமே. தாயின் கேள்வியைக் கவனியாது முறுக்கைச் சுவைப் பதிலேயே முத்தாயா மூழ்கியிருந்தாள். "நல்ல சின்னய்யன்"! என்று நாகம்மாள் சப்புக் கொட்டினாள்.

இவள் இப்படிச் சலித்துக்கொள்ளும் சின்னய்யன் யார் என்பதைப் பற்றி இரண்டு வார்த்தை சொல்லுவது அவசியம்.

நாகம்மாளுடைய கணவனுடன் பிறந்ததம்பிதான் சின்னய்யன் என்கின்ற சின்னப்பன். சின்னப்பனே தான் இப்போது குடும்பத்தலைவன்

அனேகமாக நாகம்மாளுடைய அரசுதான் வீட்டில் நடக்கிறதென்றாலும், சின்னப்பனுக்கும் அவனுடைய மனைவி ராமாயிக்கும் இதுவரை எவ்விதமான தீங்கும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. சின்னப்பனைக் குழந்தை முத்தாயா "சின்னய்யன்" என்று கூப்பிடுவதால், நாகம்மாளும் அவனை அந்தப் பெயரிலேயே குறிப்பிடுவது வழக்கம்.

வெளியே 'கடக்' என்று சத்தம் கேட்டது. 'வண்டி வந்திட்டுது போலிருக்குதே' என்று நாகம்மாள் திண்ணையிலிருந்து எழுந்தாள்.

இத்தனை நேரம் உள்ளே வேலை செய்துகொண்டிருந்த ராமாயி 'அரிசி வண்டி இதுக்குள்ளே வந்திருமாக்கா" என்று மெதுவாகச் சொல்லிக்கொண்டு வந்தாள். "சரி அடுப்பு வேலையெல்லாம் ஆச்சா?" என்று நாகம்மாள் கேட்டாள்.

ராமாயி பொழுதுபோவதற்கு முன்பிருந்தே காரியம் செய்ய ஆரம்பித்திருந்தும், ஒன்றும் முடிந்தபாடில்லை. ஆனால் "இல்லை" என்று சொன்னால் "எக்காளமாக" ஏதாவதொன்று சொல்வாளென்பது தெரியுமாதலால் "நீ தண்ணீர் வாத்துக்கிறதுக்குள்ளே ஆகாதையா போயிருது, எந்திரியக்கா" என்றாள்.

"நா மேலுக்கு ஊத்திக்கிறதுக்குள்ளே அந்த முறத்திலிருக்கிற அரிசி மாயமா வெந்துபோயிருமா? பேச்சைப் பாரு பேச்சை! மொதல்லே அரிசி கழுஞ்சு ஒலையிலே போடு. சோறு ஆக்கியானதுக்கப்புறம் வேறே வேலெ பார்க்கலாம்" என்று நாகம்மாள் சொன்னாள்.

ராமாயி பதில்பேசாது முறத்திலிருக்கிற அரிசியை எடுத்துக்கொண்டு உள்ளே போனாள். நாகம்மாள் கூப்பிட்டு 'இத்தனையுமா போடப்போறாய்'? என்றாள்.

"ஆமாக்கா நாம நாலு சீவனுக்கு இதுதா வேண்டாமா?" நல்லாக் கணக்குப் போட்டாய்! இப்படிப் பார்த்த வீடு வாசலாயிறாதா? உன்னையும் உன்ர ஊட்டுக்காரரையும் என்னையும் இந்தப் பூப்பாலனையும் ஒரே கணக்கிலே சேத்தினையே! இந்தக் கொழந்தை காப்பிடி தின்னுமா"?

"சரி, ரண்டு வட்டச் சோற்றை எடுத்துப் போடட்டாக்கா?" என்று கேட்டுக்கொண்டு ராமாயி திரும்பினாள்.

நாகம்மாள் சட்டென்று, "சுண்டைக்காயிலே வெக்கிறது பாதி கடிக்கிறது பாதியென்ன? போட்டதை ஏ எடுக்கிறாய்? மிச்சமிருந்தா காலம்பர பழையது ஆகுது, வேலெயைப் பாரு" என்றாள்.

அதோடு சாணித்தண்ணீ போட்டு இந்தக் கூடையை உள்ளே எடுத்துவை என்று கட்டளையுமிட்டாள்.

சாணித்தண்ணீர் போட்டுவிட்டால் எல்லாத் 'தீட்டும்' போய் விட்டதாக அர்த்தம். சந்தையிலிருந்து வந்து சாமான்களை உள்ளே கொண்டு போகுமுன் சாணியை நீரில் கலக்கி அதைச் சாமான் நனையாமல் தெளித்துவிடுவது, சாமான்களுக்கு மட்டும் சாணித்தண்ணீரைப் போட்டுக் கொள்வதோடு சிலர் தங்களுக்கும் போட்டுக்கொண்டு, குளிக்காமலே சும்மா இருந்துவிடுகிறதும் உண்டு. ஆனால் நாகம்மாளைப் போன்றவர்கள் அப்பேர்ப்பட்டவர்களை ரெம்பவும் இழிவாகக் கருதுவார்கள். அந்தமாதிரி விஷயங்களை நாகம்மாள் வரிந்து கட்டிக்கொண்டு பாட்டுப் பழமொழி களுடன் பேச ஆரம்பித்து விட்டால் கிட்டத்தில் இருப்பவர்களுக்குப் பொழுதுபோவதே தெரியாமல் பேசிக் கொண்டே இருப்பாள்.

## 3

பத்து வருஷமாகக் கொண்டாடாதிருந்த மாரியம்மன் உற்சவம், இந்தவருஷம் கொண்டாடப்படுகிறது. கற்கள் கீழே விழுந்தும், வங்கு பறித்தும் க்ஷீணதசை அடைந்திருந்த கோவிலின் சுவர்கள் மண்ணும் சுண்ணாம்பும் அடிக்கப்பட்டு பளிச்சென்றிருந்தன. நாலுபக்கத்தின் உச்சி யிலும் வேப்பிலைக் கொத்துக்கள் செருகப்பட்டிருந்தன. கோவிலுக்கு முன்பாக தென்னோலையிலே வேயப்பட்ட பசும் பந்தல் மிக அழகாயிருந் தது. பந்தல் கூரையின் அடிப்புறத்தில் வண்ணான் மாத்து கட்டப்பட்டி ருந்தது. சுவாமியின் சன்னிதானத்திற்கு நேர் எதிராக வெளிப்புறத்தில் பூவோடு வைக்கும் முக்கோணப் பாச்சா மரக்கம்பம் நடப்பட்டிருந்தது. கம்பத்துச்சியில் மஞ்சள் துணியில் நவதானியங்களுடன் ஒரு செம்புக்

காசும் வைத்துக் கட்டியிருந்தார்கள். ஊர்க் கிணற்றுப்பாதை, சருகு சத்தைகள் ஒதுக்கிச் சுத்தமாக்கப்பட்டிருந்தது. பாதை பூராவுமே தண்ணீர் தெளித்து குளுகுளுவெனச் செய்திருந்தார்கள்.

ஊர் முழுவதும் இதேபேச்சுத்தான். ஒவ்வொரு வீட்டிலும் சபைகள் கூடி அடுத்தநாள் எடுத்துச் செல்கிற மாவிளக்குத் தட்டங்களைப் பற்றியும், தங்கள் வீட்டுக்கு வந்திருக்கும் விருந்தினர்களுக்குச் செய்யப்போகும் பலகாரங்களைப் பற்றியும் பேசிக்கொண்டிருந்தார்கள். மணியகாரர் வீட்டில் அன்று மத்தியானம் ஊர்ப் பிரமுகர்களெல்லாரும் கூடியிருந்தார்கள். வெகுகாலமாக இருந்துவந்த விபூதித் தகராறையும் இப்பொழுது ஒத்தி வைத்து விட்டார்கள். பூஜைபண்ணி பண்டாரம் விபூதியை விருந்தினர் களுக்குக் கொடுத்துவிட்டு விபூதித் தட்டைக் கீழே வைத்துவிடுவது, பின்பு இஷ்டப்பட்டவர்கள் யார் வேண்டுமானாலும் எடுத்துக் கொள்வது என்று முடிவு செய்யப்பட்டது. மணியகாரர் தலையாரியைக் கூப்பிட்டு எல்லோருக்கும் தாகத்திற்கு இளநீர் கொண்டுவரும்படி சொன்னார். அவன் சாலையோரத்தில், காலையிலே வெட்டிக் குவித்திருந்த இளநீர்க் காயை எடுத்துவந்து அங்குள்ளவர்களுக்கெல்லாம் சீவிக் கொடுத்துக் கொண்டு இருந்தான்.

அதே சமயம் பொன்னபண்டாரத்தின் வீட்டிலும் அந்தமாதிரிதான் ஒரு காட்சி நடந்து கொண்டிருந்தது. அங்கு நாலைந்து வீட்டுப்பண்டாரங் களும், உள்ளூர்த் தோட்டி தலையாரிகளும், பழங்காலத்தில் பூஜை செய்துவந்த முறை மறைந்து ஜனங்கள் ஆத்தாளை மறந்ததால், அவள் காட்டும் கோபம் இப்படியிருக்கிறதென்றும், இதை விக்கினமின்றி நிறைவேற்றுவதொடு, தங்களுக்கு இத்தனை நாளாக நிறுத்திவைத்திருந்த வரவீனங்களோடு, சேர்த்துக் கொஞ்சம் அதிகமாகவே செய்யச் சொல்லி மணியகாரரிடம் கேட்பதென்றும், முடிவு செய்தார்கள், சின்னவர்களும் பொங்கலைப் பற்றியே பேசிக்கொண்டு இருந்தார்கள்.

அன்று இரவு ஏழு மணிக்குத் தப்பட்டைச் சத்தம் 'டிம்டிம்' என்று 'தெரப்பாக' எழுந்தது. பத்துப் பதினைந்து பறையர்கள் கம்பத்தடியில் உட்கார்ந்து அடித்துக் கொண்டிருந்தார்கள். அந்தச் சத்தத்தைக் கேட்ட வுடன் சாப்பாட்டைப் பாதியிலே வைத்துவிட்டுக் குழந்தைகள் ஓடி வந்தனர்.

பெரியவர்களும் அவசரஅவசரமாகச் சாப்பிட்டுக் கொண்டி ருந்தார்கள். பெண்களெல்லாம் மாலையிலே தலைக்குத் தயிர் தேய்த்துக் குளித்து முகத்துக்கு மஞ்சள் பூசி மினுமினுப்பாக்கிக் கொண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். வீட்டிற்குள் அடைந்து கிடக்க முடியாமல் அவசர அவசரமாகச் சாதம் பரிமாறிக் கொண்டிருந்தனர். பூவோட்டில் நெருப்பு 'தகதக' வென்று எரிந்து கொண்டிருந்தது. நாச்சபண்டாரம் விரதம் கலையாமல் பத்துப் பழங்களையும் ஒருபடி பாலையும் குடித்துவிட்டு, புகையிலையை வாயில் அடக்கிக்கொண்டு பயபக்தியுடன் சுவாமியை எண்ணெயாலும், தண்ணீராலும், பாலாலும், ஆனந்தமாக அபிஷேகம் செய்துகொண்டிருந்தான். நெய் விளக்குகள் அம்மன் பக்கத்திலே எரிந்துகொண்டிருந்தன. கன்னங் கரேலென்று கறுத்திருந்த அம்மனுக்கு இடுப்பளவு புடவை சுற்றி கண்ணுக்கு கண்ணடக்கமும் இடைக்கு ஒட்டியாணமும் இன்னும் சில நகைகளும் அணிந்திருந்தார்கள். அந்த அம்மனின் தோற்றம் அங்கு பார்த்துக் கொண்டிருந்தவர்களின் மனதில் அபார பக்தியை ஏற்படுத்துவதாய் இருந்தது. பார்க்கப் பார்க்கச் சனங்கள் வந்து கூடிவிட்டார்கள். 'கொட்டுங்கடா' என்ற சத்தம் கேட்டது பறையர்கள் 'டண், டண், டணக்' என்ற இசையில் குச்சியைத் தம்பட்டத்தில் செலுத் தினார்கள். மனதிலே ஒரு ஊக்கத்தையும் உற்சாகத் தையும் ஏற்படுத்து வதாய் இருந்தது. அந்த அடிகளின் இசை. 'ஜல்ஜல்' என்ற சதங்கைகள் ஒலிக்கக் கம்பத்தைச் சுற்றி சிறுவர்களும், பெரியவர்களும் ஆடிக்கொண்டி ருந்தார்கள். அவர்கள் தங்கள் ஆட்டத்திற்குத் தகுந்த பாட்டுகள் பாடிக் கொண்டே கம்பத்தைச் சுற்றி வந்தார்கள்.

வயதானவர்களும், பெண்களும் கோயில் ஓரத்திலும், அரசமரத்த டியிலும் நின்றுகொண்டிருந்தனர். அந்த ஆட்டக்காரர்களிலே ஒருவன் அடிக்கடி பறையர்கள் அடிப்பதைக் குற்றம் குறை சொல்லி வந்தான். அதிகாரம் தொனிக்கும் குரல், உயரத்திற்கேற்ற பருமன், உருட்டிக் கட்டின வேஷ்டி, சரியான தலைக்கட்டு, அவனைக் கண்டுகூட இருப்ப வர்கள் சந்தோஷம் கொள்வதும், அவன் அதட்டும்போது கொல்லென்று சிரிப்பதுமாயிருந்தார்கள். கம்பத்துக்கு எதிரில் தான் அரசமரக் கட்டிடம், அதன்மீது ஒரு பெரியவர் உட்கார்ந்திருந்தார். அவருக்கு வயது அறுபது எழுபது இருக்கும். அவர்தான் ஊர்ப்பண்ணாடியின் தகப்பனார். வயது அதிகமாகிக் கண்பார்வை மங்கிவிட்ட போதிலும் ரொம்ப உற்சாகமாகவே

அவைகளை ரஸித்துக் கொண்டிருந்தார். அருகே போகிற வருகிறவர்களை விடாமல் ஏதோ வாயைக் கிளறிக் கொண்டிருந்தார். "யாரடா சின்னு இந்த அதிகாரம் பண்றவன்?" என்று அவர் கேட்கவும் பக்கத்தில் இருந்த வன் "அது நம்ம கெட்டிப்பனுங்க" என்றான். அந்தப் பெயரைக் கேட்டவுடன் "இப்படி ஏன்டா ரவுசு போடறான்? வெடிய வெடிய அடிக்கிற பறையனுக் கல்ல கயிட்டம் தெரியும்" என்றார். அதோடு அவர் "அவனுக்கு குடிக்கிற தற்கு காசு எங்கிருந்து கெடைக்குதோ" என்றார்.

'அவனுக்கு எப்படியோ கெடைச்சுப் போகுதுங்க' என்று ஒருவன் சொல்லவும் அருகிலிருந்த எல்லோரும் சிரித்தார்கள்.

அவனுக்கு எப்படிப் பணம் கிடைக்கிறது? என்ன ஏதாவது மந்திரம் தந்திரம் கற்று வைத்திருக்கிறானா? அதெல்லாம் ஒன்றுமில்லை; கெட்டியப் பனுக்கு இருந்த காடொன்றையும் தொலைத்துவிட்டான். அவன் வேறு ஒன்றும் செலவு செய்யவில்லை; இட்டலியும், கள்ளும் அந்தக் காட்டை விலைக்கு வாங்கிவிட்டது! இப்போது வெறும் ஆள். அந்த 'விடுசூளை' யாருக்கும் பயப்படமாட்டான். ஊரில் எல்லோரும் அவனை ஒரு மாதிரி யாகத்தான் நடத்துவார்கள். அவனிடம் பகைத்துக் கொண்டாற் போச்சு; அன்றைக்கு விரோதித்துக் கொண்டவனுக்கு வாழைத்தோட்டம் இருந்தால் பத்துப் பன்னிரண்டு தாராவது பிஞ்சோடும் பூவோடும் அறுபட்டுப் போய் விடும். அல்லது தென்னந்தோப்பு உள்ளவராயிருந்தால் இருபது முப்பது குலையாவது பாளை குருத்தோடு காணாமற் போயிருக்கும். அவனிடம் தன்னைப்போன்ற நாலைந்து ஆட்களும் உண்டு. கெட்டியப் பனைப்பற்றி வளர்த்தினா வளர்ந்துகொண்டே போகும். இப்போது அவனது ஆட்டத்தைப் பார்ப்போம்.

"எனுங்க மாப்பிளே, இந்தப் பறயர்க அடியெல்லாம் மறந்திட்டானுக" என்று கையிலிருந்த கவையை ஓங்கிக் கொண்டு கெட்டியப்பன் தம்பட்டம் கொட்டுகிறவர்களை அடிப்பது போலப் போனான்.

"அடே கெட்டி, கெட்டி, வாண்டாம்" என்று சத்தம் போட்டுக் கொண்டு பண்ணாடிக் கவுண்டர் ஓடி வந்தார். அதே சமயம் 'ஏனுங்கசாமி'! "இந்த வெளக்கு புசு புசுன்னு போகுது" என்று சொல்லிக் கொண்டே நாச்ச பண்டாரம் வந்தான். 'எக்கேடோ கெட்டுப்போங்கடா' என்று சொல்லிக் கொண்டு கெட்டியப்பன் தன் சாலையை நோக்கி நடந்தான்.

# 4

எண்ணெய் நிறைய இருந்தும் காற்று குறைந்து விட்டதால் 'கேஸ்லைட்' கொஞ்சம் கொஞ்சமாக உயிர் விட்டுக்கொண்டு வந்தது. பிரகாசமாக எரிந்து கொண்டிருந்த விளக்குக்கு என்ன நேர்ந்து விட்டதோ? இனி 'லைட்டுக்காரனைக்' கூப்பிட்டுத்தானே அதை 'ரிப்பேர்' செய்ய வேண்டும் என்று அவர்கள் நினைத்தார்கள். அந்த மாதிரி விளக்குகளைக் கண்டிருகிறார்களே ஒழிய பாவம் அதைப்பற்றி ஒன்றுமே தெரியாது. யாராவது சிறுகுழந்தை விளக்கருகில் சென்றாலும் அவர்கள் அதட்டுகிற அதட்டில் குழந்தைகள் நடுநடுங்கிப் போய்விடும். நாலுநாள் வாடகைக்கு வாங்கி வருவார்கள். கூடவே விளக்கைக் கொழுத்த, அணைக்க ஒரு ஆளையும் கையோடே கூட்டிவந்து விடுவார்கள். இந்த விசித்திர வேடிக்கைகளைப் பிரமாண்டமான கூட்டம் கண்டு களிக்கிறதே!. ஆனால் விளக்குக்காரன் எங்கே?

அவன் எந்த வீட்டுத்திண்ணையில் படுத்துத் தூங்குகிறானோ? ஊர்ப்பண்ணாடி தீவட்டிக்காரனைக் கூப்பிட்டவுடன், அரைத் தூக்கத்தி லிருந்த ராமவண்ணான் ஒரு பந்தத்தைக் கொழுத்திக் கொண்டு ஓடி வந்தான். அவன் தலைமயிர் அந்த வெளிச்சத்தில் சிவப்பு வர்ணம் பூசியிருப்பதுபோல் தெரிந்தது. அடிக்கடி கையிற் தொங்கவிடப்பட்டிருக்கும் கலயத்திலிருந்து எண்ணெயைக் கரண்டியில் எடுத்துவிடும் போதெல்லாம் தன்மேலும் சிந்திக் கொண்டான். சற்று நேரத்திற்கு முன் அங்கு காணப்பட்ட உற்சாகம் கொஞ்சம் சோபை குன்றிவிட்டது. ஊர்ப்பண்ணாடி உத்தர விடவும், நாலைந்து பேர்கள் லைற்றுக்காரனைக் கூட்டிவர நாலு திக்கு களிலும் ஓடினார்கள். அப்போதுதான் நிலவு வெளிக்கிளம்பி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது. மங்கலாக இருண்டிருந்த வழிகளில் அவர்கள் வேகமாகச் செல்லும்போது தட்டுத் தடுமாறிக் கொண்டே ஓடினார்கள். வீட்டுத் திண்ணையில் பகல் பூராகவும் துணி துவைத்த சலிப்பில் வீராயி தூங்கிக் கொண்டிருந்தாள். பண்டிகை நாளாதலால் ஏராளமான வேஷ்டியும்,, புடவையும் அலசி அலசி எடுத்து அவள் இடுப்பு முறிந்தி ருந்தது. அந்த ஆயாசத்தோடு அயர்ந்து தூங்கும்போது, ஒரு சிறுவன் ஓடிவந்து 'தடதட' வென்று அவளைத் தட்டி எழுப்பினான். "சீக்கிரம் வா விளக்குப் போச்சு" என்று அவசரமாக அச்சிறுவன் சொல்லவும்

தும், சிறுவன் பெரிய ஏமாற்றத்தோடு திரும்பி வேகமாக நடக்கையில் வாசலில் அடித்திருந்த முளை தடுக்கிவிடவும், கரணம் போட்டுக் கொண்டு வீதியில் விழுந்தான். இந்த விதமாக அந்த இரவு லைற்றுக்காரனைத் தேடப் போனவர்களுக்கு நேர்ந்த விபத்துக்கள் எவ்வளவோ!

கடைசியாகப் பாதித் தூக்கத்திலும், முழுத்தூக்கத்திலும் திண்ணை யிற் தூங்கிக் கொண்டிருந்த முக்கால்வாசிப் பேர்களை எழுப்பியான பிறகு, நடராஜனைக் கண்டுபிடித்து விட்டார்கள். நடராஜனுக்கு முதலில் இவர்கள் சொல்வது ஒன்றும் புரியவில்லை. ஆனால் கண்ணைத் துடைத்துக் கொண்டு "உடைந்துவிட்டதா?" என்றான்.

அவர்கள் சொல்வதிலிருந்து **"லைட்டுக்கு"** என்ன நேர்ந்துவிட்டது என்று அவனால் ஊகிக்க முடியவில்லை. பின்னர் அவன் கோவிலுக்கு வந்து சேர்ந்தபோது கூட்டம் முக்கால்வாசிக்கு மேல் கலைந்துவிட்டது. பந்தம் பிடிப்பவன் கீழே உட்கார்ந்திருக்கும் நடராஜனைச் சுட்டுவிடுபவன் போல் பந்தத்தைச் சாய்த்துப் பிடித்துக் கொண்டிருந்தான். அதிலிருந்து கிளம்பும் எண்ணெய்ப் புகையை அவனால் சகிக்க முடியவில்லை. சற்று நேரத்தில் 'கேஸ்' ஏற்றவும் பழையபடி வெளிச்சம் வீசியது.

அடுத்த நாள் புதன் கிழமை ஒவ்வொரு வீட்டிலிருந்தும் **"கிண்கிண்"** என்று நெற்குத்தும் மனோகரச் சத்தம்; கோவிலுக்கும், வீட்டிற்கும், வீட்டிற்கும், கோவிலுக்கும் சனங்கள் ஓயாமல் நடந்துகொண்டிருந்தார்கள். அன்று ஒரு தோட்டத்திலும் ஏற்றம் இறைப்பாரைக் காணோம். ஏன் தோட்டத்துக்கு யாரும் போவதைக் காணோம், ஏதாவது வாழைக்காய், வாழையிலை, மிளகாய், இளநீர் வேண்டுமானால் துள்ளிப் பாயும் இரண்டொரு சிறுவர்களே தோட்டத்துப் பாதையிற் காணப்பட்டார்கள். மாரியம்மன் பண்டிகைக்காக முறுக்கு, மிட்டாய், வெற்றிலை, பாக்கு, சூடம், சாம்பிராணிக் கடைகள் பக்கத்தூரிலிருந்து செட்டியார்கள் கொண்டு வந்திருந்தார்கள். பொரிகடலைக் கடைகள்தான் அதிகம் வந்திருந்தது. ஒரு வளையல்காரன் "அம்மா வளையல்! வளையல்!! "என்று கத்திக் கொண்டே ஊருக்குள் சுற்றிக்கொண்டிருந்தான். கோவில் முன்னால் கருங்கல் அடுப்புக்கள் அனேகம் தயாராயிருந்தன. அவைகளின் மீது அழகான புது மண்பாத்திரங்களில் சாதம் கொதித்துக் கொண்டிருந்தது.

அதோ, வெண்கலத் தொனியிலே ஒரு பெண் பேசுவது கேட்கி றதே, அது யாரது? அந்தப் புடவைக் கட்டிலிருந்தும் பாய்ச்சல் நடை யிலிருந்தும் நாகம்மாளாகத்தான் இருக்க வேண்டுமென்று ஊகித்துக் கொள்ளலாம். ஆமாம் நாகம்மாள் தான்! சுளிக்கும் மின்னல் போல அங்குமிங்கும் திரிந்து கொண்டிருக்கிறாள். சற்றைக்கொருதரம் "ராமாயிடம் வந்து" கல்லைச் சரியாய் தள்ளிவெய், கரண்டியெ அந்தப் பக்கம் வெக்காதே, குழந்தையெப் பார்த்துகோ, அடுப்புக்கிட்டே போகப் போகுது" என்று சொல்லிக் கொண்டிருந்தாள். ராமாயிக்கு இதெல்லாம் சுத்தமாகப் பிடிக்கவில்லை. கஷ்டப்பட்டுக் கஷாயம் குடிக்கும் குழந்தையைப்போலப் பொறுமையுடன் ஏற்றுக் கொண்டாள். சில சமயம் எனக்கே இதெல்லாம் தெரியும் என்பாள். உடனே நாகம்மாளுக்குப் பிரமாதமாகக் கோபம் வந்துவிடும்.

"அப்படியா, இதோ நா போயிடறே" என்று நாலு எட்டு வைத்து விட்டுத் திரும்பி", உனக்கோசரம் நா போயிட்டா பின்னே என்ன இருக் கிறது"? என்று நின்றுகொண்டு உருட்டி விழிப்பாள்.

அங்கு கடல் ஒலிபோல் முழங்கும் அத்தனை கதம்பக் குரல் களையும் கூட ராமாயினால் சகித்துக்கொண்டு சந்தோஷமாக இருக்க முடிந்தது. ஆனால் கெட்டியப்பன் அங்கு செய்யும் அட்டகாசங்களை அவளால் கண்கொண்டு பார்க்க முடியவில்லை. காட்டுராஜாபோல கண் களை எதற்காக அவ்வளவு சிவப்பாக்கிக் கொண்டிருந்தானோ? பெருங் காற்றைப்போல கும்பலில் அங்குமிங்கும் அலைந்துகொண்டிருந்தான். ஒரு கடைக்காரனை அந்த இடத்தில் சாமான் விற்கக் கூடாதென்பான். ஒருபுறம் கட்டியிருக்கும் தோரணத்தைப் போய் அறுத்து விடுவான். எங்காவது ஒரு மூலையில் யாராவது ஒரு சக்கிலிப் பெண் கல்லடுப்புக் கூட்டி அப்போதுதான் நெருப்பு மூட்டுவாள்; இவன் பார்க்காதவன் போல காலால் உதைத்துக் கொண்டே செல்வான். இதையெல்லாம் பார்த்து ராமாயி "பகவானே அவனுக்குக் கூலி கொடுப்பார்" என்று சும்மாயிருந்தாள். ஆனால், அவன் தன் பாத்திரங்களைக் கேட்காமல் எடுத்துக் கொள்வதும், திடீரென்று எங்கோ போய்ப் பஞ்சாமிர்தம், பழங்கள் கொண்டு வருவதும், குழந்தையை எடுத்துக் கொண்டு கொஞ்சுவதும் அவளுக்குப் பிடிக்க வில்லை. இத்தனைக்கும் மேலாக அவனது ஆட்ட பாட்டங்களைக்

கண்டு நாகம்மாள், ஆனந்தப்பட்டுக் கொண்டு அவனிடம் பேசுவதையும் சிரிப்பதையும் காணக்காண ராமாயிக்கு கோபமும் வெட்கமும் பொங்கிக் கொண்டு வந்தது. இந்தமாதிரிப் பெண்ணும் உலகத்தில் இருப்பாளா! என்ன மானஈனமில்லாத்தனம், என்று மனத்திற்குள் நினைத்துக் கொண்டாள்.

மாலை நான்கு மணிக்குப் பூஜை முடிந்து யாவரும் பொங்கலோடு வீடு திரும்பினர். குழந்தை முத்தாயாளை எடுத்து இடுப்பில் வைத்துக் கொண்டு இன்னொரு கையில் சாமான்களிருந்த கூடையை தலையில் வைத்துக் கொண்டு ராமாயி வீட்டுக்குப் புறப்பட்டாள். அதே சமயம் கோயிலுக்குப் பின்புறத்தில் நாகம்மாள் கெட்டியப்பனுக்கு என்னவோ மடியிலிருந்து எடுத்துக் கொடுத்தாள். அதைக் கண்டு முகத்தைச் சுழித்துக்கொண்டு ராமாயி வேகமாக நடந்தாள்.

## 5

ராமாயி பொங்கல் பாத்திரத்தை வீட்டில் இறக்கி வைத்துவிட்டுத் தன் புருஷனைக் கூட்டிவரக் காட்டிற்குக் கிளம்பினாள். முத்தாயாளும் கூடவருவேனென்று அழுதாள். "நீ இங்கேயே இரு முத்து. நான் சீக்கிரமா வந்திடரே" என்று கால்படி உழக்கை எடுத்து ஒரு குத்துப் பொரியை அதில் போட்டுவிட்டு அவள் புறப்பட்டாள். அவள் புருஷன் எருமைக்குப் புல் கொண்டு வருவதற்காகத்தான் இன்று காட்டிற்குப் போயிருந்தான். இன்று விசேஷ நாளானதால் வழக்கம்போல் வரும் சக்கிலிப் பையனும் வரவில்லை. அதனால் சின்னப்பனே இன்று காட்டிற்குப் போயிருந்தான். ஆனால் பொழுது போயும் ஏன் வீடு வரவில்லை என்பது ராமாயிக்கு விளங்கவில்லை. அதற்காகத்தான் தானே போய்ச் சீக்கிரமாகக் கூட்டிவரச் சென்று கொண்டிருந்தாள். காடு சுமார் அரை மைலுக்கு மேல் இருக்கும். குறுக்கு வழியாகச் சென்றால் மூன்று காடு தாண்டினால் போதும், அதனால் இட்டேறியிற் செல்வதை விட்டு விட்டுக் காட்டுப் பாதையில் ராமாயி நடந்தாள். வழி பூராவும் தட்டைக்காய்க் கொடிகள் ஒன்றோடொன்று பின்னிக் கிடந்தன, நடக்கும் போது கால்களைச் சுற்றிக்கொண்டு தடுமாறச் செய்தன. காட்டில் விதையாமல் முளைத்திருந்த வெங்கக் கற்கள் காலைக் காயப்படுத்தின.

அந்திவேளை, சூரியன் அஸ்தமித்துக் கொண்டிருந்தான். சூழ்ந்திருந்த ஊஞ்சல் மரங்களிலும் சங்கம் புதர்களிலும், பொன்னிற மின்னல் கம்பிகள் ஊசலாடிக் கொண்டிருந்தன. இடையிடையே ஓணான்களும், பூச்சி புழுக்களும் போவதால் 'சரசர' என்ற சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. ராமாயி வேகமாக நடந்தாள். எதிரே யாராவது வருகிறார்களா? என்று தலையைத் தூக்கிப் பார்த்துக் கொண்டாள். அடுத்த ஊருக்குப் போய் நூல் போட்டுப் பஞ்சு வாங்கி வந்த மணியகாரரின் தாயாரைக் கண்டதும் அவளுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. "இந்த வயதிற்கூடப் பணம் சேர்ப்பதில் எவ்வளவு ஆசை பார்" என்று சொல்லிக் கொண்டாள்.

பெரியவள் ராமாயியைக் கண்டதும் "அடி ஆத்தா இந்நேரத்திலே மஞ்சளு, மணமுமா இந்தப் பக்கம் தனியா வரலாமா?" என்று சொல்லிக் கன்னத்தில் கை வைத்தாள்.

ராமாயிக்கும் மனத்திற்குள் கொஞ்சம் பயம்தான். இருந்தாலும் மனத்தைத் தேற்றிக் கொண்டு. 'என்னூட்டுக்காரரை கூட்டியாரப் போரேன்'. கிழவி கன்னத்திலிருந்த கையை எடுக்காமல் கொஞ்சம் நெற்றியைச் சுழித்துக் கொண்டு "அவனை நீ தான் கோல் பிடித்துக் கூட்டியாரோணுமா? எனக்கும் எழுபது வயதாச்சு இந்த அதிசயத்தைக் கண்டதில்லீம்மா. என் கல்யாணமான வருஷம் ........." என்று பெரிய பேச்சாக ஆரம்பிக்கவும் ராமாயி தடுத்து "இல்லே நேரமாச்சு", பூசையெல்லாம் பண்ணியாச்சு. இன்னம் காணமேன்னு போறே" என்றாள்.

கிழவி வாயெடுப்பதற்குள் மீண்டும் ராமாயி "நீங்களே போய் பஞ்சு வாங்கியாரணுமா? ஆராச்சு போறவங்ககிட்ட கொடுத்துட்டா வாங்கியார மாட்டாங்களா", என்றாள்.

"கொறப் பயங்கிட்டே கொடுத்துட்டாகூட, செட்டி பஞ்சு கொடுத்து டுறா. ஆனால் என் நூற்புக்கு எல்லோரையும் போலவா துட்டு வாங்குவே? இண்ணக்கி மூணு அணா எச்சா வாங்கியந்திருக்கிறேன்' என்று இடுப்பிற் செருகியிருந்த முடிச்சைத் தொட்டுக் காட்டினார். கிழவியின் சாமர்த்தியத் தைக் கேட்டுச் சிரித்துக் கொண்டே "நான் போயிட்டுவாரே" என்று ராமாயி நடந்தாள்.

தனது புருஷன் கிணற்றடியில் இருப்பானென்று பார்த்தாள். ஆனால் அங்கே காணோம். இரண்டொரு ஆட்டுக்குட்டிகள் தான் வேலி முட்களைத் தின்று கொண்டிருந்தன. வெகு தூரத்தில் இவளுடைய புடவையைக் கண்டதும் மாடு 'அம்மா' எனக் கத்தியது. சரி குடிசைக்குள்தான் இருப்பார். ஆமாம் இந்நேரத்தில் குடிசையில் என்ன செய்கிறார்? என்று யோசித்துக் கொண்டே போனாள்.

சின்னப்பன் குடிசைக்குள் இருந்த கயிற்றுக் கட்டிலின் மேலே உட்கார்ந்திருந்தான். அந்தக் கிராமத்திலிருந்தும் கூட அவன் தேகம் திடகாத்திரமானதல்ல. அதிலிருந்தே இளமையில் அவன் அதிக நோயினால் கஷ்டப்பட்டிருக்கிறான் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். அவனது முகத்தில் வாழ்வின் சஞ்சலச் சாயைகள் ஒன்றுமில்லை. கஷ்ட ஜீவனத்தின் கவலைகள் இல்லையாதலால், கண்களில் ஜீவகளை தளும்பிக் கொண்டிருந்தது.

சின்னப்பனுக்கு அவளைக் கண்டதும் பெரிய ஆச்சரியமாய் இருந்தது "நீ இங்கே ஏ வந்தா? நானே வரலாமெனுருந்தேனே" என்றான். அவள் பேசவில்லை. அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவனுடைய குரலைக்கேட்ட அவளுக்கு என்னமோ போலிருந்தது.

"இங்கே ஏ ஊட்கார்ந்துகிட்டு இருக்கீங்க? என்று சொன்னவள் அதற்குள் அங்கே கட்டிப்போட்டிருந்த புல்லைப் பார்த்துவிட்டு எடுத்துக் கிட்டு வராமே நல்லா ரோசனை பண்ணீட்டிருந்தீங்க" என்றாள்.

ராமாயி "செரி சொன்னா ஒரு பேச்சிலே எந்திரியுங்கோ" என்றாள். அவள் முகம் துயர அலைகளால் வாடியது. இள்ங்காற்றில் நழுவிப்போன மாராப்புச் சேலையைக்கூட எடுத்துச் செருகவில்லை. ஒரு காலைக் குடிசைக் கம்புமேல் வைத்து நின்று கொண்டிருந்தாள். சின்னப்பன் கட்டில் கயிற்றை ஒவ்வொன்றாகத் தடவியவாறே, அதோ அந்தத் தப்பட்டைச் சத்தம், அதைத் கேக்க எனக்கு எப்படி இருக்குது தெரியுமா? என்றான்.

அவன் "அந்தச் சத்தம்" என்றவுடன் மெதுவாகக் கேட்டுக்கொண்டி ருந்த சப்தம் பலமாகக் கேட்பது போலிருந்தது அவளுக்கு அரைகுறையாக அர்த்தமானாலும் முழுதும் தெரியவேண்டி "என்ன?" என்றாள்.

"என்னவா? உங்கிட்ட முந்தி சொன்னகதைதா உம் என்னமோ நம்ம ஊர் பூரா தலகால் தெரியாது குதிக்குது. ஏமாளியாயிருந்தவங்க கூட கொம்மாளம் போடறாங்க. இப்படிதா பத்து வருசத்துக்கு முன்னே பொங்கலப்போ நானும் என் அண்ணனும் ......" என்று நிறுத்தினான்.

"அந்தக் குப்பையைக் கிளறுதுலெ என்ன சொவம் இருக்கு? ஒடம்பிலே வாணம் பட்டு மேனாடுபோன மவராசன் புண்ணியவான்னு சொல்லுங்க" என்றாள் ராமாயி. "அது நெசந்தா. கமுந்த பாலு கலயம் ஏராது, ஆனா அதெ நெனக்க நெனக்க.........அடடா! அண்ணக்கி ஆட்டம் கட்டினதிலிருந்து சாமத்துவரே எப்படிக் குதிச்சுக்கிட்டிருந்தோ, அண்ணக்கி ராத்திரி வாணத்திலே அண்ணெ ஒடம்பு வெந்துபோகுமின்னு எவந்தான் நெனைச்சா! உம், ஆத்தா இத்தனை நாளாகக் கொண்டாடா திருந்து கூட எமக்கு ஒரு விதத்திலே நல்லதாக இருந்தது. ஆனா இப்போ அந்த நெனப்பெல்லா புத்தீசல் போலப் பொலபொலன்னு வருதே!" என்றான்.

ராமாயி கணவன் முகத்தையே பார்த்துக் கொண்டு நின்றாள். வெளியில் ஒரே இருட்டு; குடிசைக்குப் பக்கத்திலிருந்த பட்டியிலிருந்த ஒரு ஆடு 'மே மே' எனக் கத்தியது. ராமாயி என்னவோ நினைத்துக் கொண்டு வந்து அது எப்படியோ முடிந்து விட்டது. புருஷனை அதிக சந்தோஷமூட்ட வந்தவள் தானே அவனுடைய" சோகத்திற்கு அதிக தூபம் போட்டவளானாள். ஆனால் இதையெல்லாம் சமாளித்துக் கொண்டு, "இப்படி உட்காரதிலே என்னலாபம் போவலாமே" என்றாள்.

"சின்னப்பனுக்கும் அவள் சொன்னதைத் தட்டாமல் எழுந்தான் அவன் கையிலுள்ள புல் கட்டைத் தான் வாங்கிக் கொண்டு, "இந்த வருஷம் உங்க அக்கா கூட ஏம் பொங்கலுக்கு வல்லெ" என்றாள்.

"அவ கைக்கொழந்தைக்கு மாந்தமாம். ஒரு வாரமாகப் படுத்துக் கிட்டிருக்குதாம். அதனாலே, இங்கே நலக்கத்தோடு எடுத்துட்டு வரோனுமின்னு நின்னுட்டா. அவ புருஷங்கூட வர முடியாது போச்சு" என்றார்.

அப்போது ராமாயிக்கு அன்று மாலை நாகம்மாள் நடந்து கொண்டது ஞாபகத்திற்கு வந்தது. ஆனால் தன் கணவன் எங்கே கோபித்துக் கொள்வானோ என் அஞ்சி ஏதோ சொல்ல வாயெடுத்தவள் அடக்கிக் கொண்டாள்.

"இருந்தாலும் ஒரு பொம்பளே, அத்தனை பேருக்கெதிரில கெட்டியப்பனோடு அப்படி சிரிப்பும் விளையாட்டுமா இருப்பாளா? அந்தப் பேச்சையே எடுக்காதே' என்று கசப்புடன் சின்னப்பன் கூறினான்.

## 6

அடுத்த நாள் காலை அமைதி கலைக்கப்படுவதற்கு முன்பே சின்னப்பன் கலப்பையைத் தோளில் சாத்திக் கொண்டு தோட்டத்திற்குக் கிளம்பினான் இன்று எள்ளு விதைப்பு நாள். அதனால் தோட்டத்து ஆளிடம் முன்னமேயே எருதுகளைப் பிடித்துக்கொண்டு போகும்படி சொல்லியிருந்தான். போகும்போது நாகம்மாளை சீக்கிரமாக வரச் சொல்லியிருந்தான்.

ராமாயி வாசலில் பாத்திரங்களைப் பரப்பி விளக்கிக் கொண்டிருந்தாள், அன்று அவளுக்குச் சாதாரணமான நாளைவிட வேலை சற்று அதிகமாக இருந்தது. "நீ இப்படி ஒய்யாரமா உக்கார்ந்துகிட்டுருக்கிறா: நாம் போக வேண்டாமா? என்றாள் நாகம்மாள்.

"ஆச்சு, இதோ தண்ணிய சுடவைச்சுக் கொடுத்துடறே" என்று சொல்லிவிட்டு வேகமாக காரியத்தைக் கவனித்தாள்.

அப்பொழுது அவளைப் பேசச் சொல்லியிருந்தால் "சாலிட்டு வந்து குளித்துத் தொலையறதுதானே" என்ற வார்த்தைகள் வெளி வந்திருக்கும்

ஆனால் அவள் வாயைத் திறக்கவில்லை அப்படிச்சொன்னால் வீடே கிடுகிடுத்து விடுமே! இவள் சும்மா இருந்தாலும் நாகம்மாள், "ராத்திரிப்பூரா தலைவலி, படாதபாடுபட்டே, இப்போ இந்தக் கதகதப் போடேயெ ஓடு என்கிறாயா? அப்படிப் போய்ப் பாடுபட்டு கடைசியிலே நானா தலெயிலெ கட்டிக்கிட்டுப்போறே? என்று உக்கிரமாக மொழிந்தாள்.

ராமாயி பதில் பேசவில்லை. அவளிடம் பேசுவதால் வீண்வம்பை விலைக்கு வாங்கிக் கொள்வதாகுமென்று எண்ணி மௌனமானாள் நாகம்மாள் மறுபடியும் என்னவோ தூற்றிக் கொண்டே வீட்டிற்குள் போனாள் அடுப்பில் பால் 'குபு குபு' எனப் பொங்கிக் கொண்டிருக்கிறது கதவோரம் கூட்டின குப்பை ஒதுக்கி வைத்திருந்தது. அதைப் பார்த்துவிட்டு இதெ வழித்துக் கொட்டக் கூட நேரமில்லை! அப்படி வேலெ பறக்கிறது. என்று முணு முணுத்தாள் அவள் சொல்வதைக் கேட்காதவள் போல அவசர அவசரமாகப் பாத்திரங்களைத் துலக்கி வைத்துக் கொண்டிருந்தாள் ராமாயி. இந்த ராணியம்மாவின் லீலைகள் என்றுதான் அடங்குமோ என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்டாள். அவளை எதிர்த்துப் பேசுவது புருஷனுக்குப் பிடிக்கவில்லை. தனக்கும் என்ன காரணத்தாலே அவளைச் தட்டிச் சொல்ல மனம் வருவதில்லை. இதை இப்படியே விட்டால் நாளுக்கு நாள் அதிகமாகக் கொண்டுதானேபோகும்? ஆனால் அதற்காக என்ன செய்வது? "முத்து இங்கே வா, தலெயிலெ இதென்ன மண்ணா? ஆ இந்த ஊட்டிலெ உன்னெக் கவனிச்சு குளிப்பாட்டி உட உண்டா?" என்று அங்கலாய்த்துக் கொண்டாள்.

இந்த வார்த்தைகளைக் கேட்க ராமாயிக்குப் புண்ணில வேலை விட்டு உபத்திரவிப்பது போலிருந்தது இருந்தாலும் சகித்துக்கொண்டு ஒன்றும் பேசாமல் இருந்தாள்.

நாகம்மாள் ஸ்நான பானம் பண்ணுவதற்குள் வெயில் நன்றாக வந்துவிட்டது. ஆனாலும் அவள் புறப்பட்டபாடில்லை. தெருவரையிலும் போய்விட்டு மறுபடியும் வீட்டிற்குள் வருவாள். என்னவோ வைத்து மறந்து விட்டவள்போல அங்குமிங்கும் தேடிவிட்டு "எதுதா வெச்ச இடத்தில் சீராக இருக்கிறதா" தென்பாள் "இந்தப் பொகையிலெயை அடுக்குச்

சந்தில வெச்சதாரோ? எங்கே கொண்டுபோக வெச்சதோ?'' என்பாள். "எங்க அம்மா ஊட்டுக்குத்தா கொண்டு போலாமின்னு ஒளிச்சு வைச்சே'' என்று சொல்லி விடலாமென ராமாயி நினைப்பாள்.

ஆனால் அவளிடம் விவாதம் செய்வதில் பயன் ஒன்றுமில்லை யெனக் கண்டு "முத்து மத்தியானம் ஆகிவிட்டது மாட்டுக்குக் கழுநீர் களிஞ்சு வெக்கலெ வா போகலாம்'' என்று குழந்தையைக் கூப்பிட்டுக் கொண்டே ராமாயி நகர்ந்தாள்.

நாகம்மாள் குழந்தையைத் தரதரவென இழுத்துக் கொண்டு, "உனக்கு விடியறப்பவே மத்தியானம் ஆயிடும். மத்தியானம் ஆனா இருட்டிட்டது என்பாய். பகலே இருட்டோ எண்ணு சொல்றது தானே! எதுக்கு இத்தனை திருகுதண்டஏ'' என்று ஆத்திரமாகச் சொன்னாள்.

"நா சண்டெக் காட்டுக்கு இளச்சவ ளக்கா'' என்று சொல்லிக் கொண்டே ராமாயி கட்டுத்தரைப்பக்கம் கழிதட்டுக்களை ஒதுக்கப் போய்விட்டாள். முத்தம்மாளுக்கு இந்த நாடகம் விளங்கவில்லை. எப்பொழுதும் சொந்தத் தாயை விட அதிக செல்லமாக ராமாயி வளர்த்து வருகிறாள். ஆதலால் "சின்னம்மா நா உங்கூட வர்ரே'' என்று அவள் பின்னால் ஓடினாள் முத்து.

"உன்னையும் நாளக்கு அவளெப்போல ஒரு 'தட்டுவாணி'யாக்கிப் போடுவா அங்கே போகாதே வா! அங்கு போகாதே'' என்று தன் மகளுக்கு நற்புத்தி கூறி நாகம்மாள் குழந்தையின் கன்னத்தில் ஒரு இடி கொடுத்துவிட்டு நடந்தாள்.

காலம் மகத்தான மாறுதலைச் செய்து விடுகிறது. இந்த கர்வம், அதட்டல், அகங்காரம் எல்லாம் ஒரு நாளைக்கு மண்ணில் தலை சாய்ந்துவிடும். ஒளியின் வேகத்திற்கும் ஒரு எல்லையுண்டு. வீணாக ஏன் மனத்தை அலட்டிக் கொள்ள வேண்டும். ஆனால் ராமாயி இந்தச் சித்தாந்தங்களை நினைத்ததாகவே தெரிய வில்லை. அவள் கண்களில் தழும்பிய நீரைத் துடைத்துக் கொண்டே, கூடையில் இருந்த சாணியைக் குப்பை மேட்டில் கொட்டிவிட்டு, கட்டுத் தரையில் வீழ்ந்து கிடந்த கழி

தட்டுக்களைப் பொறுக்கிக் கொண்டிருந்த முத்தாயியைக் கூப்பிட்டாள். சின்னம்மாவின் குரலைக் கேட்டதும் குழந்தை தன்கையிலிருந்த தட்டுக்களை எறிந்து விட்டு ஓடிவந்து அவளைக் கட்டிப் பிடித்துக் கொண்டே "அம்மாளை எங்கே போவச் சொன்னாய்" என்றது.

ராமாயி தன்னையும் அறியாமல் "சுடுகாட்டுக்கு" என்று விட்டாள். ஆனால் அடுத்த கணமே "ஐயையோ ஏன்தான் இப்படி வார்த்தை வருதோ" என்று தன்னையே நொந்து கொண்டாள்.

அதே சமயம் "நீ போகச் சொன்னவுடன் போயிடுவாளா?" என்ற சத்தம் கேட்கவும் திடீரெனத் திரும்பிப் பார்த்தாள்.

ஆழ்ந்து யோசியாமல் உணர்ச்சியின் வேகத்தில் ஒவ்வொரு சமயம் நிதானமின்றிச் சொல்லி விடுகிறோம். காலம் கழிந்து விடும், வார்த்தை நிற்கும். ஆதனால் சில சமயங்கள் பெரிய அபாயங்கூட நேர்ந்து விடுகிறதுண்டு. ஆனால் அப்படி ஒன்றும் இப்போது ராமாயிக்கு நேர்ந்துவிட வில்லை. ஏனென்றால் இந்தக் கேள்விக்குச் சொந்தக்காரியான செல்லக்காள் அப்படிப்பட்ட குணம் படைத்தவளல்ல.

"காத்தாலே எப்பவும் இதுதானா?" என்றாள் செல்லக்காள்.

"நீயும் பக்கத்திலே பார்த்துக்கிட்டுத்தானே வருகிறாய்" என்றாள் வருத்தத்தோடு ராமாயி.

"அவ குணம் தெரிந்தே இருக்குதே நீ ஏ வாய் குடுத்துக்கிறாய்"? என்று செல்லக்காள் கேட்கவும் "நானா வாய் குடுக்கிறேன்" என்று தலைமேல் கையை வைத்தாள் ராமாயி.

## 7

நாகம்மாள் தோட்டத்துக்கு வந்து சேரும்போது, சூரியன் மரக் கிளைக்கு மேலே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தான். அசைந்தாடிக்

கொண்டிருந்த கிளைகள் மேல் சூரியவெளிச்சம்பட்டு மின்னிக் கொண்டி ருந்தது. காக்கைகள் அங்கொன்றும் இங்கொன்றுமாக மண்ணுக்கு மேலே சிதறிக்கிடந்த எள்ளுகளைக் கொத்த ஆரம்பித்தன. வேலி ஓரத்தில் ஒரு மாடு மேச்சலுக்காகக் கட்டப்பட்டிருந்தது. அப்போது இரண்டு நெடும் பாத்திக்கு மேலே சின்னப்பன் உழுதிருந்தான். காளைகள் பஞ்சுப் பூமியை உழுவதைப் போல சுலபமாகத் தலை குனியாமல் போய்க் கொண்டிருந்தது. சின்னப்பன் கையிலிருக்கும் உழவுக்கோலால் கொழுவில் மண்ணை அடிக்கடி தட்டிக்கொண்டே சென்றான். இவ்வளவு நேரம் சாலிட்டுக் கொண்டிருந்த கருப்பன் எள்ளுக் கூடையை நாகம்மாளிடம் கொடுத்து விட்டு, பட்டி திறந்து விடுவதற்காகப் போனான்.

அவன் நாலடி போவதற்குள் "அடெ துரோகி காட்டிலே பண்டம் பூந்திடப் போவுது?" என்றாள் அதட்டலாக. 'சரி' என்று தலையசைத்துச் சென்றவனைக் கூப்பிட்டு, "ஏண்டா சொன்னது காதிலெ கேக்கலையா?" என்றாள். அவன் "திருதிரு"வென விழித்தான் இந்தமாதிரி அதட்டல், அதிகாரம் எல்லாம் சின்னப்பனுக்குத் துளி கூடப்பிடிக்காது. "அவனெ ஏ பயப்படுத்தோணும்? இங்கே எள்ளு சரியா விளாவிலே உழறதில்லெ" என்றான் சின்னப்பன்.

"ஆமாம் நாத்தா ஊட்டிலிருந்து கருப்புக் கம்பளியை போத்திக்கிட்டு வந்திருக்கறெ, உங்களெக் கண்டா எல்லோரும் பயப்படுவாங்க" என்றாள் நாகம்மாள்.

"ஏ அவனெ மறுபடியும் கூப்பிட்டீங்க?"

" தண்ணி கொண்டாரத்தா. குடிக்காமே தாகமாகவே இருந்திர முடியுமா?"

"தண்ணீங்கிற பேச்சே எடுக்கக் காணமே. நீங்க மனசுக்குள்ளவே சும்மா நெனச்சிருப்பீங்க" என்றான் சின்னப்பன்.

அவள் வெறுப்போடு அவன் முகத்தைப் பார்க்காமல் கூடையி லிருந்து குத்துக் குத்தாக எள்ளை வாரி இறைத்தாள். கருப்பன் திரும் பிக் கூடப்பார்க்காமல் வேகமாக நடந்தான். ஏனென்றால் பார்த்துவிட்டால் அது கூட ஒரு குற்றமாகி விடாதா?

நேர்கோடு கிழித்ததைப்போல கலப்பை பூமியைப் பிளந்து கொண்டு தெற்கே போகும். பின்பு வளைந்து மறுபுறம் திரும்பும். நாகம்மாள் மௌனமாக சாலிட்டுக் கொண்டே வந்தாள். இள மத்தியானத் துக்குள் பாதிக் காடு உழுதாகிவிட்டது அப்போது ஒரு சிறுமி பழைய சாதத்தைக் கொண்டு வந்து வேலா மரத்தடியில் இறக்கி வைத்தாள் சின்னப்பனும் ஏரை நிறுத்திவிட்டு கை கால் அலம்பிக் கொள்ளக் கிணற்றுப் பக்கம் போனான். நாகம்மாள் கூடையை வரப்போரத்தில் வைத்துவிட்டு அங்கேயே உட்கார்ந்து விட்டாள். வந்த பெண் கூடைக் குள்ளிருந்த சோற்றுக் கலயத்தை எடுத்து வெளியே வைத்தாள். ஒரு கொட்டைச் செடியிலிருந்து இலையைக் கிள்ளி வந்து சோற்றுக் கலயத் தை மூடிவிட்டு, "ஏக்கா பல் வெளக்கியாச்சா" என்று நாகம்மாளைப் பார்த்துக் கேட்டாள்.

நாகம்மாள் அவள் கேட்டதற்கு பதில் சொல்ல வில்லை. "உங்க அம்மா உன்னைச் சோறு கொண்டு போகச் சொன்னாளா?" என்றாள்.

வழக்கத்துக்கு மாறாக இன்று பக்கத்து வீட்டுச் சிறுமி சாதம் கொண்டு வந்ததால் இப்படிச் கேட்டாள் நாகம்மாள்.

"ஆமா எங்க அம்மாதா போகச் சொன்னா?" என்றாள்.

"எப்பவும் இல்லாத அதிசயமா இண்ணக்கு ஏது போகச் சொல்லீட்டா" என்று சிரித்துக்கொண்டே நாகம்மாள் கேட்டாள்.

"ஏங்கம்மா நீயாச்சு கொண்டுபோயி சோறு கொடுத்திட்டுவா. பாவம் ராமாயி ஒருத்தியும் கயிட்டப்படுறா" என்றாள். நானும் எங்க தோட்டத்துக்கு இதிலெதானெ போகோணும், இதையும் வாங்கிட்டு வந்தேன்". என்றாள்.

இந்தச் சந்தர்ப்பத்தை நன்றாகப் பயன்படுத்திக் கொண்டு இன்னும் நடந்த விஷயங்களை யெல்லாம் கேட்டறிய வேண்டி, "பாப்பா உங்குணம் தங்கமான குணம் அதனாலெதா உன்னைக் கண்டா எனக்கு பேசோணு மினு இருக்குது. உம் அப்புறம் என்ன பேசினாங்க?" என்றாள்.

பாப்பாவும் உலகத்தைப் புறட்டி விடுகிற பெரியதொரு ரகசியம் தன்னிடம் இருப்பதைப் போல "உன்னப்பத்தித்தா என்னமோ பேசிட்டிருந் தாங்க" என்றாள்.

சிறு குழந்தைகளுக்கு இம்மாதிரி விஷயங்களில் சிரத்தையே கிடையாது. வீணாக அவர்களுடைய வாயைக் கிளறினால் இல்லாததைக் கூட கண்டபடி சொல்ல ஆரம்பிப்பார்கள். பின்பு அதனால் எத்தனை சண்டைகளோ!

நாகம்மாள் துருவித் துருவித் கேட்டாள் அவளுக்குத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற பேரவா மிகுந்திருந்தது.

இதற்குள் சின்னப்பன் அருகில் வந்து விட்டான். தலைத்துண்டை விரித்துப் போட்டு அதற்குமேல் உட்கார்ந்தான். சிறுமி சாதத்தைக் கரைத்துக் கையில் ஊற்றினாள். நாகம்மாள் உட்காாந்த இடத்திலிருந்து அசையவில்லை. அவள் மனத்தில் பல சிந்தனைகள் உருண்டோடிக் கொண்டிருந்தன. இந்தமாதிரி கானலிலும் காற்றிலும் உழைத்து என்ன பயன்? ஏன் இப்படி அவர்களுடன் ஒட்டுக் குடித்தனமாக வாழவேண்டும்? இந்தப் பரந்து கிடக்கும் காட்டிலும், தோட்டத்திலும் தன் கணவனுக்குச் சேர வேண்டிய பாகம் பாதி இல்லையா? தானும் தன் குழந்தையும் ஏன் சுகமாகக் காலத்தைக் கழித்துக் கொண்டு போகக் கூடாது? தன் குழந்தைக்கு அழகான சீலை, ஒரு நகை நட்டு, பண்ணிப் போட்டுப் பார்த்தால் எப்படி இருக்கும்? மாதத்திற்கு நாலு பேருக்குக் குறையாமல் அவர்களுக்கு வேண்டியவர்கள் சொந்தம் பாராட்டிக் கொண்டு வந்து விடுகிறார்கள். இதெல்லாம் யார் சம்பாதித்தது?.

நல்லதோ, கெட்டதோ எதுவும் இப்படித்தான். ஒரு சிறு வித்து எப்படிப் பிஞ்சும் பூவும் குலுங்கும் விருட்ஷமாகி அதன் நிழலிலே எத்தனையோ ஜீவராசிகளுக்கு குளிர்ந்த நிழலைத் தருகிறதோ அந்த மாதிரி இந்தச் சிறுகனல் பொறியும் அவள் மனத்தில் மகா பெரிய அனல் மலையை வளர்க்கலாயிற்று. அப்படியே சிலை மாதிரி உட்கார்ந்து கொண்டிருந்தாளே யொழிய எழுந்திருக்கவில்லை.

சின்னப்பன் பாப்பாவிடம் மெதுவாக "அவுங்களையும் சோறு குடிக்கச் சொல்லு" என்றான். "பல்லு வெளக்கச் சொன்னே; அதையே கேக்கலயே," என்றாள் பாப்பா. அவள் சொல்லியது அருகிலிருக்கும் பத்துப் பேருக்குக் கேட்கும் போலிருந்தது.

நாகம்மாள் வெடுக்கென்று "இந்தத் தலைவலியிலெ பழைய சோத்தை நா வாயில ஊத்த மாட்டேன்" என்றாள். சின்னப்பன் அதைக் கேட்டு "தலவலியானா ஊட்டுக்குப் போயிடறது" என்றான்.

"போயிட்டா சாலிட வேற ஆள் இருக்குதாக்கும்? "அடே மாரா மாரா" என்று கூப்பிட்டான் சின்னப்பன்.

"மாரனும் வேண்டா, செல்லனும் வேண்டா" என்று தானே எழுந்தாள்.

"இல்லே வெயிலில் இருந்தா இன்னும் நோவு எச்சாகிடும்" என்று சின்னப்பன் மறுபடியும் மாரனைக் கூப்பிட ஆரம்பித்தான். மாடு மேய்த்துக் கொண்டிருந்த மாரன், சத்தத்தைக் கேட்டு எழுந்து ஓடி வந்தான். நாகம்மாள் சற்று நிழலில் உட்கார்ந்திருந்தாள். பாப்பாத்தி மீதி சாதம் எவ்வளவு இருக்கிறதென்று அளவு பார்த்துக் கொண்டே குடிக்க ஆரம்பித் தாள். இதைக் கண்ட நாகம்மாள் அவசர அவசரமாக கையைக் கழுவிக் கொண்டு "கலயத்தை இப்படிக் குடு" என்று கையை நீட்டினாள். சின்னப்பனுக்கு இதைக் காண ஆச்சரியமாக இருந்தது. திடீரென்று தோன்றிய நோவு மாயமாகத்தான் மறைந்து விடுமாக்கும் என்று நினைத்துக் கொண்டு 'தாய் தாய்' என்று காளையைத் தட்டினான். அந்தி வானத்தைக் கிழித்துக் கொண்டு செல்லும் சூரியனைப் போலக் கலப்பையும் பூமியைக் கிழித்துக் கொண்டு சென்றது.

## 8

அந்தி நேரம் மிருதுவான காற்று வீசிக் கொண்டிருந்தது. மெல்லிய காற்றால் கலைக்கப்படும் மேகக்கூட்டங்கள் விதவித உருவங்களாக வானத்தை அலங்கரித்த வண்ணம் இருந்தன. நொய்யல் நதியில் 'குருகுரு" வென

ஓடிக்கொண்டிருந்த நீரைக் காலால் அடித்தவாறே வெண் மணலில் ஒரு மனிதன் நடந்து கொண்டிருந்தான். அவன் தலையில் ஐந்து முள நீளமுள்ள துப்பட்டியை உறுமாலாகச் சுற்றிக் கொண்டிருந்தான். உருட்டிய வேட்டியைக் கையால் தடவிக் கொண்டே கரையேறி ஒற்றையடிப் பாதையில் இறங்கி நடந்தான்.

கறுப்புக் கோடுபோல கரையருகே இருண்டிருந்த மரங்கள் அசையும்போது சில சில பழுப்பு இலைகள் உதிர்ந்து கொண்டிருந்தன. அவன் போய்க் கொண்டிருந்த காட்டின் இடக்கோடியில் ஒருகுடிசை பனை ஓலைகளால் வேயப்பட்டிருந்தது. அக் குடிசையின் ஓரத்தில் இரண்டொரு ஓலைகள் தலை தூக்கிக் கொண்டிருந்தன. அதன் அருகே எப்போதோ கள்ளோ அல்லது தெழுவோ குடித்துவிட்டு எறிந்த பனங் கொட்டையொன்றும் ரொம்ப நாளைக்கு முன் மாமிசம் வறுத்ததிற்கு அடையாளமாக உடைந்து போய்க் கிடந்த சட்டித் துண்டுகளும், அடுப்புக் கல்லும் தங்களை இந்த நிலைக்குக் கொண்டு போய்விட்ட அன்பனின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருப்பது போலிருந்தது.

நாம் முன்பு சொன்ன ஆள் நடுக்காட்டிற்கு வந்ததும் குனிந்து ஒரு கல்லை எடுத்தான். பின்பு என்ன நினைத்துக் கொண்டானோ, கல்லைத் தூர எறிந்து விட்டு, "யாரடா அது எருமையை வேலியோரம் கட்டியது?" என்றான். அந்தக்குரல் வெங்கல மணியிலிருந்து எழுந்த நாதம் போல வெகு தூரத்திற்கு விசிறி அடித்தது. ஆற்றங்கரையோரம் இடிந்து போய்க் கிடந்த கோயிலில் அதன் பிரதித் தொனி 'கணக்'கென எழுந்தது. இந்த அமானுஷ்யமான குரலிலிருந்து அந்த நபர் கெட்டியப்பன்தான் என்று விளங்கியிருக்கும். திடீரென்று பிறந்த இந்த அதிகாரம் வெகு பேருடைய வேலையைத் தடைசெய்யுமென்று கெட்டியப்பன் எண்ணியிருக்கவே முடியாது.

பக்கத்துக் காட்டில் மரமேறிக் கொண்டிருந்த சடையமூப்பன் பாதி மரத்திலேயே டக் கென்று இடைக்கயிற்றை நிறுத்தி சுற்றும்முற்றும் பார்த்தான். அவன் கண்ணுக்கெட்டிய தூரம்வரை தெரிந்த ஜீவன்க ளெல்லாம் தங்கள் பாட்டில் இயங்கிக் கொண்டிருந்தன. ஆனால் இந்தத் தொனிக்குச் சொந்தக்காரர் யார் என்பதை அவனால் தெரிந்து கொள்ள

முடியவில்லை சூந்யத்திலிருந்து வெடித்து வீசிய பேய்க் காற்றாக்கும் என்று எண்ணிக் கொண்டான். போலிருக்கிறது அதனால் மூப்பன் 'டப் டப்' என்று முன் நோக்கி மேலேறி உச்சியின் அமிர்த கலசத்தை அடைய முயன்றான். பண்டம் பாடிகளை ஓட்டிக்கொண்டு போகிற சிறுவர் சிறுமிகளும் அவசர புல் புடுங்கிக் கொண்டிருந்த கருப்பாயியும், சோளங்காட்டிற்குத் தண்ணீர் இறைத்துக் கொண்டிருந்த குப்பனும், இன்னும் மற்றவர்களும் ஏககாலத்தில் நாற்புறமும் திரும்பிப் பார்த்தார்கள் என்பதைக் சொல்லுவது அநாவசியம். ஆனால், இதற்குள் அந்த எருமைக்குச் சொந்தக்காரன் மந்திரவாதியைப் போல மாயமாகத் தோன்றி, எருமையுடன் மறைந்து விட்டான்.

குடிசைக்கு முன்னால் மூடியிருந்த தென்னந்தடுக்கை எடுத்து உசரத்தில் போட்டுவிட்டு உள்ளே நுழைந்தான். உட்புறம் ஒரே இருட்டாய் இருந்தது. அதனால் அங்கே போட்டிருந்த கட்டிலில் நெற்றி 'பட்' என்று மோதிவிட்டது. 'உஸ் ஆ' என்று கொண்டே தீப்பெட்டியை எடுக்க ஓலைக்கிடையே கையை விட்டான். "ஓ அடி பலமாகப் பட்டுவிட்டதா? ஏன்று யாரோ கேட்கவும், கெட்டியப்பன் சடக்கென பின்னால் நகர்ந்தான். அகாலத்தில் வந்த இந்த அபூர்வக்குரல் தானா அல்லது பேயோ பிசாசோ வென அவன் மிரண்டு நிற்கையில், மெதுவாக ஒரு பெண்ணின் குரல் "நீதா கெட்டியப்பனாச்சே" என்றது.

"அட! நீயா, மாரியாத்தா மாதிரி இந்த நேரத்திலே இங்கே வந்து ஒளிஞ்சிருக்கிறே?"

"ஆமா நா ஒளிஞ்சுதா போனே" என்றது அந்தப் பெண்குரல் எடுத்த எடுப்பிலேயே இப்படிச் சுடச்சுடப் பதில் கொடுப்பது நாகம்மாள்தான். அவள் மசமசவென்றிருக்கும் போதோ வந்து விட்டாள். வரம் கொடுக்கும் வரை பக்தன் பார்த்துக் கொண்டிருப்பதைப் போல தன் அன்பன் வரும்வரை பொறுமையுடன் இருந்தாள். அன்று சிக்கலான சில விஷயங்களை அவருடைய அரிவாள் மூளையினால் தெரிந்து செல்ல வந்திருந்தாள்.

"வெளக்கில்லயா?" என்றாள் நாகம்மா "அதுக்குத்தா தீப்பெட்டி எடுக்கப் போறபோது நீ பயப்படுத்தி உட்டாயே" என்று சொல்லிக்கொண்டே

ஓலைக்குள் கையை விட்டுத் துளாவினான் அவன் கை பட்டு ஓலை சரசரத்தது "இந்தா சத்தம் செய்யாதே" என்று சொல்லிக் கொண்டே நாகம்மாள் தான் கொண்டு வந்திருந்த பலகாரங்களை மடியிலிருந்து எடுத்தாள்.

"இங்கே யாருமில்லெ, காளியையும், நாச்சோறு கொண்டுகிட்டுவர போகச்சொல்லிட்டே. இந்தா வெளியே எட்டிப்பாரு பட்டி சாத்தீருக்குதா?" என்றான்.

"என்ன நானா போய்ப்பார்க்கிறது? ஆராச்சு இந்தப்பக்கம் வருவாங்க போவாங்க"

'அடடா!' என்றவன். அதிலே எத்தனையோ வார்த்தைகளில் பேசுவதைச் சொல்லி விட்டான். நாகம்மாள் ரொம்பத் தணிவாக' "அதுக்காகச் சொல்லலெ உனக்குக் கூட" என்றவள் கொஞ்சம் பலமாக "இதென்ன அசிங்கியம்" என்றாள். அவள் வார்த்தைகளிலே உண்மையான வருத்தம் கலந்திருந்தது.

ஆமாம், இது சகஜம் தானே, தன் நடத்தையின் சாயல் ஒருதரம் மின்னி விழுந்தது. காரிருளில் கன்னம் வைக்கும் கொலைகாரன் கூட தன் செய்கையை எண்ணி உள்ளூர அதிகமாக ஒவ்வொர் சமயம் வருத்தப்படுவதில்லையா? கெட்டியப்பன் விளக்கைக் கொளுத்திக் கொண்டு "இண்ணக்கி காட்டிலே ரொம்ப வேலையா? இப்படி வெய்யில்லெ ஒழைச்சா உன்னுடம்பு என்னவாகும்?" என்றான்.

வாழைக் குருத்துப் போல தளதள வென்றிருக்கும் அவளுடைய தேகம் கருப்பாகி விடுமோ என்று அவன் சஞ்சலப்பட்டான் போலும்!

நாகம்மாள் எந்த விஷயத்தைப் பற்றிப் பேசலாமென்று வந்தாளோ அந்த விஷயம் ஆரம்பிக்கும் முன்பே எதிர் வந்துநிற்கிறது இனியென்ன மனத்திலுள்ளதை, வெளிப்படுத்த வேண்டியதுதானே!

"உனக்கு எப்பவும் பச்சை மாவுதானே புடிக்கும்" என்று இலையி லிருந்த பலகாரங்களை அவன் முன் நகர்த்தினாள்.

கெட்டியப்பன் ஒப்புக்கு அதைத் தொட்டு ஒரு வாய் போட்டுக் கொண்டு "எனக்கு ராமாயி கொடுத்தா, பொழுதோடை தின்னது இன்னம் பசியே இல்லெ நெஞ்சைக் கரிக்குது" என்றான்.

"என்ன நெசம்மாவா. ராமாயி கொடுத்தாளா?" என்று ஆச்சரியத்தோடு கேட்டாள். "நீ எப்போ ஊட்டுக்கு போனாய்?"

'மத்தியானம், தூங்கி எழுந்ததும் அங்கதா வந்தேன் நீ காட்டிலெ இருந்தாய். கொஞ்சநேரம் உக்காந்திருந்தே என்ன இருந்தாலும் ராமாயி கொஞ்சம் விதரணெ தெரிஞ்சவதா.

நாகம்மா எதைப்பற்றியோ யோசித்துக் கொண்டிருந்தாள். காற்றுக் கொஞ்சம் கனத்தடித்ததால் வாரி வெளியில் தொப் என்று ஒரு தேங்காய் விழுந்து உருண்டு சென்றது.

"எல்லாம் எப்படி இருக்குது? சும்மா கையைக் கட்டி உக்காந் திட்டாயா?" என்றான்.

அவள் ரொம்பத் தணிவாக "நான் அவங்ககிட்டிருந்து விலகிடப் பாக்கிறேன்." என்றாள்.

"நீ சொன்னதும் ஒத்துக்கு வாங்களா?" என்றான்.

"அதுக்குத்தானே உம்பட ரோசனையைக் கேக்கிறே"

"இந்தத் தோட்டம் காடு எல்லாம் உம் புருசன் சம்பாதிச்சது தானே?"
"புதுமனுசனாட்டப் பேசறயே!"

"சரி, இதிலே குடுக்க மாட்டேண்ணு சின்னப்பன் தகராறு செஞ்சா என்ன பண்றது? என்று கெட்டியப்பன் சந்தேகத்தோடு கேட்டான்.

"நீ தான் என்னவாவது பண்ணேணும்" என்றாள் அவள். அவன் முகத்தைப் பார்த்துக் கொண்டு, கெட்டியப்பன் சிறிது நிதானித்து விட்டு, "எப்படியும் பார்த்தே தீருவது. அப்படி கன்னா பின்னான்னா மணியாரனென நம்ம கைக்குள் போட்டுக்கொள்றது கடைசியிலே நா இருக்கிறே" என்றான்.

நாகம்மாள் நிமிர்ந்து உட்கார்ந்தாள். அவள் கண்களிலே சற்று முன் காணாத ஒரு ஒளி வீசியது.

"உம் நேரமாச்சு நா போறெ" இப்படி ஓரச்சு சொல்லறதுக்கு ஒரு ஆள் இல்லையேன்னுதா தவம் கிடந்தே" என்று சொல்லிக்கொண்டே தலையை வெளியே நீட்டிப் பார்த்தாள். யாரோ வரப்பின் மீது வருவது தெரிந்தது.

உடனே அவசரமாக "நான் போறெ" என்று அடியெடுத்து வைத்தாள். "அது ஆருமிருக்காது" என்று கூறிக்கொண்டே அவள் பின்னால் வெளியே வந்தான் கெட்டியப்பன். துரிதமாக மறையும் பட்டுப் பூச்சியைப் போல அந்த இருளில் கண நேரத்திற் பறந்து சென்றாள் நாகம்மாள்.

## 9

பொங்கல் கழிந்து ஒரு மாதமாயிற்று. ஆயினும் அதைப்பற்றிய பேச்சே இன்னும் ஊரில் அடிபட்டுக் கொண்டிருந்தது. பள்ளுப்பறை பதினெட்டுச் சாதிக்கும் இந்தப் பேச்சே உபயோகமான பொழுது போக் காயிருந்தது. "அக்கா என்னூட்டிலே அப்படி குபுகுபுன்னு பொங்கல் சாஞ்சிருக்காட்டி என்னாவது நடந்திருக்கும்" என்பாள் ஒருத்தி..

"ஆத்தா கிருபே இல்லாட்டி இந்தக் கட்டாப்பு எம் பொண்ணு பொழக்கிறதேது!" என்பாள் மற்றவள். இப்படி அம்மனுக்குக்கூட கௌரவம் உயரத்தான் செய்தது. இந்த வைபவத்தை ஒரு மாதமல்ல, ஒரு வருஷத் துக்குப் பின்னும் பேசிக்கொண்டிருக்கச் சிலர் தயாராயிருந்தார்கள். ஒரு விஷயம், அது நல்லதோ, கெட்டதோ, அவசியமோ, அனாவசியமோ

என்ன சங்கதியானாலும் அதை வளர்த்திக் கொண்டே பொழுதைக் களிப்பதில்தான் சிலருக்குப் பிரியம். அம்மாதிரி விபரங்கள் அவர்களோடு நிற்காமல் வீட்டுக்குவீடு பரவி, கூடிய சீக்கிரம் கிராமம் முழுவதும் வியாபித்து விடும். இப்போது இப்படிப்பட்டவர்களுக்குத்தான் கெட்டியப்பன் நாகம்மாள் கிடைத்து விட்டார்களே! இனிச் சும்மாவா விடுவார்கள்.

காட்டிலும், மேட்டிலும், களத்திலும், இட்டேறியிலும் முதலில் ஓரிருவர் இரகசியமாகப் பேசிக்கொண்டிருந்தது. பின்பு பகிரங்க இரகசியமாயிற்று உள்ளேயிருப்பவர்களுக்குத் தெரியாததெல்லாம் எப்படித்தான் வெளியில் இருப்பவர்களுக்குத் தெரிந்து விடுகிறதோ! ஒரு வேளை கற்பனை ரொம்பவும் உதவி செய்கிறது போலும்! நாலைச் சொல்லிவைப்போமே பத்து கல்லு போட்டால் ஒரு கல் குறியாக விழாதா என்பது அவர்கள் எண்ணம். அதன் பின் நுணுக்கமாக ஆராய்ச்சி செய்யத் தலைப்பட்டு விடுகிறார்கள். சின்னப்பனுக்கு இதைக் கேட்கும் தோறும் ஒரு சாண் கயிற்றை எடுத்துச் சுருக்குப் போட்டுக் கொள்ளலாமா வென்று தோன்றும். பரம்பரையாக அவனுடைய பாட்டன் பூட்டனெல்லாம் எவ்வளவோ மான மரியாதையாக வாழ்ந்திருந்தார்கள். அவனுடைய தகப்பனார் காலத்தில் அவர்தான் ஊருக்குப் பெரிய மனிதர். அதாவது தோட்டி முதற் கொண்டு தொண்டைமான் வரையிலும் அனைவரும் தங்களு டைய வழக்குகளைத் தீர்த்துக்கொள்ள அவரிடம்தான் வருவார்கள். அவர் குணத்திலும் தங்க மானவராய் இருந்ததைப் போலவே, பல்வேறு சச்சரவுகளையும் இரண்டு சாட்சியாரும் சரி என ஒத்துக்கொள்ளும்படி சொல்வார். கடைசியாக மனஸ்தாபத்தோடு வந்தவர்கள் மகிழ்ச்சியோடு "மவராசன் எது சொன் னாலும் ரண்டு கண்ணுக்கும் மூக்கு வெச்சது போலத்தான்" என்று வாழ்த்திக் கொண்டே போவார்கள். சின்னப்பனும் தன் தகப்பனாரைப்போல நேர்மையானவன் தான் என்றாலும் இப்போது இவனிடத்தில் யாரும் எந்த வழக்குகளையும் தீர்த்து வைக்கச் சொல்வதில்லை. இதற்குப் பல காரணங்கள், முக்கியமாக ஊருக்குள் இரண்டு கட்சி இருப்பதுதான்.

யாரும் நேரடியாகத் தன்னிடம் நாகம்மாளின் நடத்தையைப்பற்றிச் சொல்வதில்லை யென்றாலும், அப்போதைக்கப்போது நடப்பு விபரங்கள், சின்னப்பனுக்குத் தெரிந்துகொண்டுதான் இருந்தன. ஒருநாள் இதை

மனதில் வைத்துக்கொண்டு தன் மனைவியை இரண்டு அடி பலமாகப் போட்டுவிட்டான். பாவம், எதிர்த்துச் சொல்லக்கூடத் தெரியாத ராமாயி தன் தலை விதியை நொந்துகொண்டே குப்புறப் படுத்துக்கொண்டு அழு அழு என்று அழுததுதான் மிச்சம். இன்னொருநாள் மனைவியிடம் "நீ தான் சொல்லக்கூடாதா? என்றான்.

"என்ன? என்று அவள் கேட்டாள்

"என்னவா? அதுதான் ஊர் சிரிக்குதே உங்காது செவிடாவா போச்சு?"

"அதெல்லா கேட்டுத்தா இருக்கிறே, என்னெ என்ன பண்ணச் சொல்றீங்க" என்றாள்?

சின்னப்பன் பேசாமல் இருந்தான். அவனுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. இப்படியே விட்டுவைப்போமா? அப்படியானால் தெரிந்தே தான் சும்மா இருப்பதாகப் பிறர் நினைப்பார்கள் என்ன அசிங்கம்! குடும் பத்தின் பேரைக் கெடுக்கத் தோன்றிவிட்டாளே! இந்த நாசக்காரியால் இன்னும் என்னென்ன அநர்த்தங்கள் விளையுமோ என்று நினைக்கும்போதே அவனுக்கு நடுக்கமெடுத்தது.

"எழுந்து போங்க பால் கறக்க நேரமாவிலையா? என்னத்துக்கு விருமத்தி புடிச்சாப்பல உக்காந்திட்டே இருக்கிறீங்க என்றாள் ராமாயி.

சின்னப்பனுக்கு அப்போதுதான் பால் கறக்காமல் சும்மா உட்கார்ந்து கொண்டிருக்கிறோம் என்பது தெரிந்தது. 'உம்' என்று ஒருவித சலிப்போடு எழுந்தான். ஒரு மூலையில் ஒதுக்கி வைத்திருந்த குப்பையைப் பார்த்து "இதெ வழிச்சுக் கொட்டப்படாதா?" என்றான் வெறுப்போடு. அதே சமயம் திண்ணையோரம் கோழிக்கூடு இன்னமும் மூடாமலிருப்பதையும், கோழியும் குஞ்சும் சத்தமிடுவதையும் கண்டான். இவைகளையெல்லாம் காணக்காணச் சின்னப்பனின் கோபம் அதிகரித்துக் கொண்டே வந்தது.

"ஏ இதெல்லா அப்படி யப்படியே கெடக்குது? பாங்காக் கெவனிக்க ஒருத்தரும் இல்லையா" என்றான் கோபமாக அதட்டிப் பேசினாலே விறுக்கெனப் பாய்ந்து கொள்கிற சுபாவமுடைய ராமாயி, தன் கணவன் என்ன கேட்டான் என்பதையே மறந்துவிட்டு "இதெல்லா அக்காதா பார்த்துக்குவா" என்றாள்.

"அவளுக்கு வரவர புத்தியும் கெட்டுப் போச்சு" என்றான். சாதாரணமாக தன் அண்ணன் மனைவியிடம் சின்னப்பனுக்கு எப்போதும் மதிப்புண்டு. ஆதியிலிருந்தே அவர்கள், நீங்கள் என்ற மரியாதை தப்பி ஒருபோதும் குறிப்பிட்டதில்லை. ஆனால் இன்று அவன் வாயிலிருந்து "அவள்" என்று வருகிறது. இதெல்லாம் நடத்தையின் பலன் போலும்!

அப்போது நாகம்மாள் எங்கிருந்தோ வந்து விட்டாள். ஆகையால் இவர்கள் சம்பாஷணை அப்படியே பாதியில் நிற்கவேண்டியதாயிற்று. சின்னப்பன் அருகிருந்த பால் கலையத்தை எடுத்துக் கொண்டு கட்டுத் தரைக்குப் போனான். அவனிடம் இப்பொழுது நாலு எருதுகள் தான் இருக்கின்றன. இரண்டு பசுக்களில் ஒன்றை போனவருஷம் திருப்பூர்தேரில் விற்றுவிட்டான். அதற்குப் பதில் வேறு பசு வாங்கவில்லை. குழந்தை முத்தம்மாள் பால் குடியைமறந்து விட்டாள் ஆதலால் அந்த ஒரு பசுவே அவர்களுக்கு எதேஷ்டமாகவிருந்தது. காளைகள் எப்பொழுதும் தோட்டத்திற் தானிருக்கும். பசுவையும் பால் கறந்தவுடன் தோட்டத்துக்குப் பிடித்துக் கொண்டு போய்விடுவான்.

சின்னப்பனைக் கண்டவுடன் கன்றுக்குட்டி துள்ளிக் குதித்தது. இந்த வாயில்லாப் பண்டத்திற்கு கூட விசுவாசம் இருக்கிறது. அந்தப் பழிகாரிக்குக் கூட இல்லையே" என்று நினைத்தான். வேட்டியை முழங் காலுக்கு மேல் இழுத்து கோவணம் போட்டுக் கட்டிக்கொண்டு எதிரில் துடிதுடித்துக் கொண்டிருந்த கன்றிடம் "பால் குடிக்க ரொம்ப ஆசையா?" என்று அதன் கோமளமான முதுகைத் தடவிக்கொண்டே அவிழ்த்து விட்டான். கன்று நாலுகால் பாய்ச்சலில் சென்று அடி மடியை நாலு மோது மோதி முலையிலே வாயை வைத்துச் சப்பியது. அருகே எங்கோ சென்றுகொண்டிருந்த எருமை ஒன்று இந்தக் காட்சியை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டு நின்றது. எருமையையும் பசுவையும் சின்னப்பன்

மாறி மாறிப் பார்த்தான். ஒருவேளை அந்த வெள்ளைக்கும் கறுப்புக்கும் உள்ள ஒற்றுமையைப் போலத்தான் குடும்பத்திலும் தற்போது ஒற்றுமை இருக்கிறது என்று நினைத்தானோ என்னவோ!

பால் கறந்து கொண்டு வீட்டிற்குத் திரும்பினான். வீதித் திண்ணையோரம் முத்தாயா ஒண்டியாக நின்றிருப்பதைக் கண்டதும் "இங்கே ஏனாத்தா நிற்கிறாய்? என்று அன்பாக அதனுடைய கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனான். "அம்மாளெப் பார்த்துகிட்டு இருந்தெ" இப்பத்தா மாமெ கூட்டிப்போனாங்க" என்றாள் முத்தாயா.

"மாமன்" என்ற வார்த்தையைக் கேட்டதும் 'திகில்' என்றது சின்னப்பனுக்கு சகஜமாக மாமன் என்று முத்தாயா கெட்டியப்பனைத்தான் சொல்லுவாள்.

"சரி கண்ணு நீ இப்படி விளையாடிட்டு இரு; அம்மா வருவாங்க" என்று கூறிவிட்டு அவன் உள்ளே போனான்.

ராமாயி உள்ளிருந்தவாறே "நா போயிட்டா வெடுக்கிண்ணு போயிடும் இந்தச் சங்காத்தம் ஒழிஞ்சமாதிரி" என்று உரக்கச் சொல்லிக் கொண்டு வந்தாள். சின்னப்பன் தெரிந்து கொண்டவனாய் நீயும் போகவேண்டாம் அவளும் போகவேண்டாம். இந்தா பாலைக் காச்சு போ, என்று பால் கலயத்தைக் கொடுத்தான்.

முத்தாயா "சின்னய்யா எங் கிலுகிலுப்பையைப் பாத்தாயா?" என்று ஆனந்தப் பெருக்குடன் ஓடிவந்து அவன் மடிமீது விழுந்தாள். சின்னப்பன் அவளிடமிருந்த கிலுகிலுப்பையை வாங்கிப் பார்த்தான். புத்தம் புதிதாக பளபளவென்ற மேல் தகடு இன்னும் மெருகு போகாது இருக்கக் கண்டு இது ஏது? என்று ஆச்சரியப்பட்டான். ஒருவேளை பொங்கலில் வாங்கியதாக இருக்குமோ? குழந்தை தான் உடைக்காமல் இன்னும் விட்டு வைக்குமா?

சின்னப்பன் குழந்தையின் தலையை அன்புடன் தடவி விட்டுக் கொண்டு "இது உனக்கு ஆரு கொடுத்தாங்க?" என்று கேட்டான்

அதற்குள் தலையில் நிறைய மண் இருப்பதைப் பார்த்து நன்றாகத் தட்டிவிட்டுக் கொண்டே "ஆராச்சு தலையிலே மண்ணெப் போட்டுக் கிட்டா விளையாடவாங்க?" என்றான்.

"எல்லாம் மண்ணெ அள்ளிப் போட்டுக்கிறப்போ நா போட்டுக்காமெ எப்படி இருக்கிறது சித்தப்பா? என்று கேட்டது குழந்தை.

சின்னப்பனுக்குச் சிரிப்பு வந்தது. ஆமாம் வாஸ்தவம் தான், கோவணம் கட்டாத ஊரில் கோவணம் கட்டியவன் பயித்தியக்காரன்தான். ஆனாலும் இந்தக் குழந்தைக்கு இருக்கிற யூகம் இதைப் பெற்றவளுக்கு இல்லையே! எல்லோரும் யோக்கியமாக ஒழுங்காக இருக்கிறபோது அவளுக்கேன் புத்தி இப்படிப் போச்சு என்று எண்ணினான். முத்தாயா என்னென்னவோ கேட்டுக் கொண்டேயிருந்தாள். அவள் கேட்கிற போதெல்லாம் 'ஆம், இல்லை' என்று சொல்லிக் கொண்டேயிருந்தான் சின்னப்பன்.

என்னப்பா அப்பனும் மவளும் கொம்மாளம் போடறீங்க' என்று குரல் கேட்கவும் சின்னப்பன் திரும்பிப் பார்த்தான். தடியை ஊன்றிக் கொண்டு மேக்காகலவளவுப் பெரியவர் நிற்பதைப் பார்த்து 'வாங்க மாமா' வாங்க வாங்க! ஏது இந்தப் பக்கம் அத்தி பூத்தாப்பலே? என்று எழுந்து உட்கார்ந்தான்.

"அட இல்லீப்பா, நம்ம செங்காளி காங்கயம் போயிருந்தானாக்கு அந்த எளவு கிலு கிலுப்பை ரண்டு மூணு வாங்கியாந்திட்டான். அவனூட்டு புள்ளெ பசங்க அதை வெச்சிக்கிட்டு, குடு குடுன்னு ஆட்றதுகள். அதெப்பாத்து வளவுப் பையெ கத்தறான் இந்தக் கெரகம் என்ன சொன்னாலும் கேட்க மாட்டீங்கது. நாளைக்கு நீ சந்தைக்குப் போனா ஒண்ணு வாங்கியாந்து தொலைச்சிடப்பா" என்றார்.

அவர் சொல்லிக்கொண்டிருக்கும் போதே தன் வீட்டுக் குழந்தைக்குக் கிலுகிலுப்பை கிடைத்த விஷயம் விளங்கி விட்டது. செங்காளி வகையறாக்கள் கெட்டியப்பனுடைய அத்தியந்த நண்பர்கள். அவர்களிடம் சின்னப்பனைச் சேர்ந்தவர்கள் சரியாகக் கூட பேச்சுவார்த்தை வைத்துக்

கொள்ளமாட்டார்கள். ஓ ஹோ அங்கிருந்துதான் கைக்குக் கை மாறி நம்ம வீட்டுக்குக் கிலுகிலுப்பை வந்ததா? சரிதான், இதுதான் இங்கே எதற்கு இருக்கிறது? என்று முத்தாயா கையில் வைத்திருந்த கிலுகிலுப் பையை எடுத்தான். அவள் தூங்கிவிட்டதால் மெதுவா கிலுகிலுப்பையை விட்டு விட்டாள்..

அதை எறிந்துவிட உத்தேசித்தவன் அதையே பெரியவரிடம் கொடுத்து விடலாமென நினைத்தான். பின்பு ஏனோ "நாளக்கிப் போனா வாங்கியாரனுங்க, அதுக்காக இன்னேரத்திலே வராதுபோனா என்னுங்க?" என்று அவரைத் தட்டிவிட்டான். அப்புறம் அந்தச் சாமானை வெகு தூரத்துக்கப்பால் போய் விழும்படி விசிறி எறிந்தான். உடனே "ஐயோ, வெடியாலே குழந்தைவிளையாடக் கேட்டா எதைக் கொடுப்பது" என்று எண்ணினான். ராமாயி வேலையை முடித்துக் கொண்டு தன் கணவனை சாப்பாட்டுக்கு அழைக்க வந்தாள். தூங்குகிறானென சற்று நின்று நிதானித்தாள். பிறகு "என்னுங்க" என்று குரல் கொடுத்தாள் சின்னப்பன் விழித்துக் கொண்டுதான் படுத்திருந்தான். என்றாலும் ஏனோ பேச இஷ்டப்படாமல் கம்மென்று இருந்தான். ராமாயி மறுபடியும் கூப்பிட்டுவிட்டு தட்டி எழுப்பலாமென கீழே உட்கார்ந்தாள்.

"நா சும்மாதா படுத்திருகிறே. வேலையிருந்தா போய்ப் பாரு" என்றான்.

நீங்க சோறு ......... என்று ஆரம்பிக்கும்போதே "எனக்கு வாண்டாம், என்று சின்னப்பன் சொல்லிவிட்டான்.

"அப்படியானால் சோத்துக்குத் தண்ணி ஊத்தி மூடிடட்டுமா? அக்காளும் வாண்டாமிண்ணுட்டா"

சின்னப்பன் மௌனமாகவே படுத்திருந்தான். ராமாயிக்கு இதெல்லாம் பிடிக்காது. யார் எக்கேடு கெட்டுப் போனால் என்ன? நாம் ஒழுங்காய் இருந்தாற் போதும் என்ற நினைப்பவள் அவள். எந்த மூதேவியின் பொருட்டோ தன் கணவன் பட்டினி கிடப்பது சுத்தப் பயித்தியக்காரத்தனம் என்று அவள் நினைத்தாள்.

'இப்படியே இனி சாப்பிடாமத்தா இருந்திடப் போறீங்களா?' என்றாள்.

'அப்படி இருந்திட்டா சௌக்கியமாய்ப் போகுமா?"

ஆமா அப்படியே உட்டுட்டாலும் இன்னும் சில பேருக்குக் கொண்டாட்டந்தா'.

'இதெல்லாம் விதி இந்த மூக்குப்போன மூதேவியெல்லாம் உதித்திட்டுத் திரியுதே!'

'நீங்க பேசறது எனக்கொண்ணும் தெரியலே. இப்படி இல்லாத தெல்லாம் நீங்களே உண்டு பண்ணுவீங்க போலிருக்குதே? என்னமோ ஆருகண்டது? சும்மா ஏ .சமுசயப்படணும்? என்றாள் ராமாயி.

சின்னப்பன் அவளையே கொஞ்ச நேரம் உற்றுப் பார்த்தான். பின்பு, "கொழந்தையை எடுத்துப்போயி உள்ளே படுக்கவை" என்று கூறி விட்டு விர்ரென்று எழுந்து வெளியே போனான்.

"எங்கெயாவது ரவிசு ரச்சைக்குப் போகாதீங்க' என்று சொல்லிய படியே அவள் ஸ்தம்பித்து நின்றாள்.

## 10

செல்லக்காள் ஏனோ சில நாளாக ராமாயி வீட்டுப் பக்கம் வருவது இல்லை. முன்பெல்லாம் இரண்டு நாளைக்குச் சேர்ந்தாற்போல் வராமல் இருக்க மாட்டாள். இங்கே வந்து எங்கெங்கே என்ன நடக்கிறதோ அதையெல்லாம் விஸ்தாரமாகப் பேசுவாள். அவள் ரொம்பவும் ராமாயிக்கு நம்பிக்கையுள்ளவள். இங்கே பேசுவதை வேறு எங்கும் சொல்லமாட்டாள் அதனால் இவர்களுக்குள் எப்பொழுதும் மனஸ்தாபம் வருவதற்கிடமில்லை. ராமாயிக்குச் சில சமயம் ஆறுதல் சொல்லவே இங்கு வருவாள். அதோடு சில விசேஷ நாட்களில் ராமாயி பண்ணும் பலகாரங்களை ருசி பார்க்கவும். சாதாரண நாட்களிலும் குழப்பு பொரியல் தினுசுகளுக்கு உப்பு, காரம் சொல்லவும் வரத் தவறமாட்டாள்.

செல்லக்காள் வீடு தென்புறம் அடுத்தது தான், ஒரே ஒரு சுவர், அதுவும் கொஞ்சம் இடிந்த குட்டிச் சுவர்தான் இவர்கள் இருவருக்கும் மத்திய பாலம். அநேகமாக அந்த மதில் ஓரத்தில் நின்றுகொண்டு தான் இருவரும் பேசுவார்கள். பக்கத்து நடைக்கதவைத் திறந்துகொண்டு அந்தப்புறம் போவதில் சலிப்பு ஏற்படும்போது ராமாயி இந்த முறையைக் கையாள்வாள். செல்லக்காளும் தன் வீட்டுக் கொல்லைப்புறத்தில் நின்று கொண்டே "உனக்கு பல சோலி இருக்கும் வரமுடியாது. எனக்கும் வேலெ தலைக்குமேலிருக்குது' என்று சொல்லிக் கொண்டே மணிக்கணக்காகப் பேசுவாள். இப்படிப்பட்ட அருமையான சிநேகிதியைக் காணாவிட்டால் யாராயிருந்தாலும் என்ன சங்கதி என்று தெரிய முயற்சி செய்வார்களல்லவா?

ஒரு நாள் ராமாயி இலை கொண்டுவந்து போடும் ஆண்டிப் பையனைக் கேட்டுப் பார்த்தாள்.

அவன் என்னமோ தெரியலீங்க "ஆனா அவுங்க மக ஊரிலிருந்து வந்திருக்காங்க. மகளுக்குத்தான் ஒண்ணு இல்லாட்டி ஒண்ணு ஒடம்புக்கு வந்திருமே! தெரிஞ்சது தானே" என்றான்.

இந்தப் பேச்சிலிருந்து செல்லக்காள் ஏன் வரவில்லை என்று சுத்தமாகத் தெரியாவிட்டாலும், மகள் நோயுற்றிருக்கிறாள் என்றால் தாயார் வேண்டிய சிசுருஷை செய்து கொண்டிருப்பாள் அல்லவா? அதனால் வர நேரமில்லை என்ற அர்த்தம் கலந்திருந்தது. இதையெல்லாம் யோசித்து அறிந்து கொள்ள வேண்டியதுதான்.

ராமாயி ஒருநாள் மதிற்புறம் போய் எட்டிப் பார்த்தாள். அங்கு பின் புறத்தில் ஒரு கட்டில் போடப்பட்டு பாயும் விரித்திருந்தது. தலையணை காலுக்கு ஒன்று தலைக்கு ஒன்று இன்னும் ஒன்று எச்சாக இருப்பதிலிருந்து செல்லக்காளின் மகளே தன் படுக்கையையும் ஊரிலிருந்து தயாராகக் கொண்டுவந்து விட்டாள் என்பதை விளக்கிற்று. அதே சமயம் செல்லக்காள் தன் மகளை உள்ளேயிருந்து கூட்டிவந்து கட்டிலில் படுக்க வைத்தாள். "ஏக்கா மேலுக்கு எப்படி இருக்குது? எனக்கு இத்தனெ நாளா தெரியாது போ" என்றாள் ராமாயி. செல்லக்காள் தலையை நிமிர்ந்து பார்த்து "ஐயோ நீயா ஆயா! ஆறொன்னு இருந்தெ, ஆமாத்தா, இந்த பாழு

முண்டெ காச்சத்தா இருபது நாளா கனலா காயது'' என்று வாய்மேல் கையை வைத்தாள்.

“உம்! என்னத்தைப் பண்ணிப் போடுது? ஏதாச்சும் மருந்து கொடுக்கிறீங்களா?'' என்றாள் ராமாயி.

“ஆமாம் கொடுத்துக்கிட்டுத்தான் வருது என்ன பண்றது? இதை விட்டுட்டுவர துளிகூட நேரமில்லை. இங்கேயே காத்துக்கிட்டு கிடக்கறே இதுதான் உங்க வளவுப்பக்கம் கூட எட்டிப் பார்க்க முடியலெ''

“அதனாலே என்ன, இது நல்லானாப் போதும்'' என்று அங்கலாய்த் தாள் ராமாயி.

ஆனால் அவள் மனத்திற்குள் 'ஐயோ பாவம் இது எங்கே நன்றாகப் போகிறது' என்று நினைத்துக் கொண்டாள்.

செல்லக்காள் மகளுடைய சமாச்சாரம் குழந்தையிலிருந்தே ஒரே மாதிரியாகத்தான் இருந்து வருகிறது. சதா நோய்வாய்ப்படுதலே அவள் தொழிலாய் விட்டது. அவள் இரத்தத்திலே அணுஅணுவாய் நோய்க் கிருமிகள் கலந்துதேகம் பூராவும் வியாபித்து விட்டதால் கஷாயமும், பத்தியமும் அதுவும் இதுவும் அவளைக் குணப்படுத்துவதாய்க் காணோம். அவள் கலியாணம் செய்துகொண்டு ஒரு சுகத்தையும் காணவில்லை! ஒரு காடு தோட்டம் பருத்தி பம்பலுக்குக் போய் நாலோடே ஒன்றாய்த் திரிந்து வேலை வெட்டியிலே கெட்டிக்காரியாயிருந்தால் தான் கட்டின வனுக்கும் சந்தோஷமாயிருக்கும். புகுந்த இடத்திலும் போற்றுவார்கள். இந்த நோக்காட்டுச் சீவனைக் கண்டால் யாருக்குத்தான் பிடிக்கும் அதற்குத்தான் பத்திலே, பதினைஞ்சிலே தாய் வீட்டிற்கு வந்துவிடுவது செல்லக்காள் சொல்வதுபோல, “அவள் தலையிலே இதையெல்லாம் காண எழுதியிருக்கிறதாக்கும்!'

“கால் வலிக்குமே என்னேரம் நிண்ணபடி யிருப்பாய் எனக்குத்தான் வர முடியல்லே. போகுது இதென்ன ராமாயி, ஊருக்குள்ளே கச

முசன்னு பேசிக்கிறாங்க நெசந்தானா?''
"என்ன அது?'

"அது என்னன்னு சொல்லறது போ. அந்த மானங்கெட்ட பேச்சை! என்று செல்லக்காள் நிறுத்தினாள்.

ராமாயிக்கு உள்ளுக்குள் வருத்தமும், கோபமும் பொங்கிக் கொண்டு வந்தாலும், "என்ன அக்கா வாயை உட்டுச் சொன்னாத் தெரியுமா? சொல்லாது போனாத்தா போ'' என்று அந்தப் பேச்சை அப்படியே மறைக்கப் பார்த்தாள்.

"நாம் இருந்திடலாம்; ஆனா உலெ வாயை மூடினாலும் ஊர் வாயை மூட முடியுமா? என்று அவள் உட்கருத்தை அறிந்தவள் போலச் செல்லக்காள் பேசினாள்.

"என்னமோ நீ பேசறது மூடு மந்திரமாயிருக்குது. செரி; நேரமாச்சு மாட்டுக்குத் தண்ணி வைக்கோணும் என்று கிளம்பினாள்.

என்ன இருந்தாலும் நாகம்மாள் இப்படியா கெட்டுத் திரிவா! என்று செல்லக்காள் பேசிமுடிப்பதற்குள் "எம் பேச்சை ஆராச்சும் எடுத்தா கையிலிருப்பதுதான் கிடைக்கும்'' என்று நாகம்மாள் சொல்லிக்கொண்டே அங்கு வந்தாள். திடுக்கிட்டுத் திருப்பிப் பார்த்த ராமாயி நடுங்கிப் போனாள். அப்போது நாகம்மாளுடைய கையில் விளக்குமாறு வைத்தி ருந்தாளாகையால் அந்தப் பேச்சு அப்படியே அடங்கி விட்டதென்பதையும் செல்லக்காள் இமுக்குப் பெடுக்கென பேசவில்லை என்பதையும் தெரிவிப் பதே போதுமானது

## 11

இந்தச் சம்பவம் நடந்த சில தினங்கள்வரை குடும்பம் எவ்வித ஆட்ட அசைவுமின்றிச் சென்றுகொண்டிருந்தது. சிற்சில சமயங்களில் புயல் கிளம்புவதற்கு அறிகுறிகள் தோன்றும். ஆனால் அதற்குக் காரணம்

பூதமான சண்டமாருதமே நிறுத்திக் கொள்ளும். நாகம்மாளின் வேகத் தணிவைக் கண்ட சின்னப்பன், "ஒரு நல்ல வேளை புத்திவந்து விட்ட தாக்கும்" என்று ஆறுதலடைந்தான்.

இதற்கிடையில் சோளக்காடு அறுவடை வேறு வந்து சேரவே ஊரிலும் இப் பேச்சு சற்று மட்டுப்பட்டது. காலையில் எழுந்திருந்ததும் எழுந்திராததுமாய் காக்கை, குருவி போல் தோட்டக் காட்டைநோக்கி ஓடிக் கொண்டிருக்கும்போது, வீண் பேச்சுப் பேச நேரம் ஏது? தவிர, கதிர் கொய்யும்போது நான் முந்தி நீமுந்தி என்று அவளவள் காரியமாயி ருக்கையில் இந்த அத்துவானச் சங்கதியிலா பொழுதைப் போக்குவார்கள்?

நல்ல வேளையாக சின்னப்பன் காரியத்தில் கண்ணாயிருந்ததால் சோளக்காடு ஊருக்கு முந்திபோரடித்துத் தவசம் கூட மூட்டை ஏறிவிட்டது. இனி பருத்தி வெடி தான் பாக்கி.

ஒரு நாள் காலை, ராமாயி அடுப்படியிலே வேலை ரொம்ப முசுவாகச் செய்தவண்ணம் இருந்தாள், நாகம்மாள் தயிரைக் கடைந்து, மத்து, சட்டி, பானைகளெல்லாம் சீராகக் கழுவி வைத்துவிட்டு, அடுக்குச் சந்தில் துணி மணிகளைப் புரட்டிக்கொண்டிருந்தாள். கூடையைத் தூக்கி வைப்பதையும், குண்ணாவை நகர்த்துவதையும, உறிச்சட்டியை துளாவு வதையும், பார்த்தால் அன்றைக்கு வேலைகள் வெகு வேகமாகப் போய்க் கொண்டிருப்பது தெரியும். 'முத்து கடுகை எடுத்துக் கொடுக்கச் சொல்லி வாங்கியா, கண்ணு" என்று ராமாயி சொன்னாள். நாகம்மாள் தானே கடுகுச் செப்பை எடுத்துக் கொண்டு எண்ணையும் கொண்டு போனாள். "கத்தரிக்கா இன்னும் அரியலயா?" என்று நாகம்மாள் கேட்டாள்.

"இல்லையக்கா இதோ அரிஞ்சு வெக்கிறே"

"இல்லெ ஆயா; இந்தா நீ கொஞ்சம் சாணியப்போட்டு அந்த சின்ன ஊட்டை மாத்திரம் வழிச்சிரு. இண்ணக்கு வெள்ளிக்கிழமையல்ல நா பூரா பார்த்துக்கிறே" என்றாள் நாகம்மாள்.' அப்புறம் சும்மா ரண்டு சொம்பு தண்ணீலே வழிச்சிட்டு கண்மூடி விழிப்பதற்குள்ளே வாயா. பருத்திக் காட்டுக்கு முன்னலேயே போயிடலாம். தோட்டம் போற போது

சொல்லீட்டுப் போனாங்க என்றாள். ராமாயிக்கு ஒருபுறம் சந்தோஷ மாக நாகம்மாள் பேசி எவ்வளவோ நாட்களாகிவிட்டன. கலியாணமான பத்தடியில் எவ்வளவோ கொஞ்சிக் குலாவி அன்பாக ஆதரவாகப் பேசி இருக்கிறாள். அதற்குப் பிறகு அதுவும் சமீப காலத்தில் வீட்டில் ஒரே சண்டையும் சச்சரவும் தான். பழையபடி இன்று அந்த சிரித்த முகத்துடன் மிருது வசனத்தைக் கேட்ட அவளுக்கு ஆனந்தந் தாங்க முடியவில்லை. இதிலிருந்து நாகம்மாள் எப்போதும் கடுகடுத்தவளாக இருக்கவில்லை என்பதும் விதரணை தெரிந்தவள் தான் என்பதும் விளங்கும். பொதுவாக எல்லோர் உள்ளத்திலும் இனிமையும், இளச்சமும், கனிவும், காதலும் பொங்கித்தான் நிற்கிறது. சந்தர்ப்ப பேதங்களினால் சிலர் வேண்டுமென்றே இதயத்தைக் கடினமாக்கிக் கொள்கிறார்கள். போலும்.

இன்று நாகம்மாள் காட்டும் நயப்பெருக்கு வேறொரு காரணத்தைப் பற்றியது. பாம்புக் குட்டி புரண்டு விளையாட வந்தாலும் கொத்துவதைத் தவிர வேறு எதற்காக இருக்கமுடியும்?

நாகம்மாளும் ராமாயியும் பருத்திக் காட்டுக்கு வந்து சேர்ந்தபோது மற்றப் பெண்களும் தயாராகக் காத்துக் கொண்டிருந்தார்கள். அந்த பெண்களில் முக்கால் வாசிக்குமேல் இளவயதுடையவர்கள் தான். அவர்கள் புடவைத் தலைப்பை எடுத்து இடுப்பைச் சுற்றி மடி கூட்டியிருந் தார்கள். கெண்டைக் காலுக்குமேல் தூக்கிக் கட்டிய கொசுவம் வைத் திருந்த கொரநாட்டுச் சேலையுடன் நடு நெற்றியில் வாகு எடுத்துச் சிலர் கொண்டை போட்டிருந்தார்கள். இன்னும் சிலர் ஈரக் கூந்தலை உலர்த்துவதற்காக கோடலி முடிச்சுப் போட்டிருந்தார்கள். அவர்களது மினுமினுப்பான உடப்பும் கரங்களின் உறுதியும் பார்க்கப் பார்க்க இன்னும் பார்த்துக் கொண்டே இருக்கலாம் எனத் தோன்றும். இளமை பூத்து நிற்கும் அங்க வனப்பை, அள்ளி எறிவதைப் போல, நிமிர்ந்து அவர்கள் கலகல என்று பேசும்போதும், சிரிக்கும்போதும், கால் மிஞ்சிகள் ஒலிக்க நடக்கும் போதும், செடிகளை ஒதுக்கிட்டு அவர்கள் முன்னோக்கிச் செல்லும்போதும் அவர்களுடைய ஒவ்வொரு அசைவிலும் மனத்தை மகிழ்விக்கும் மாயம் ததும்பி நின்றது! இவர்களெல்லாம் சின்னப்பன் காட்டிற்கு கூலிக்குப் பருத்தி எடுக்க வந்திருக்கிறார்கள். பத்துப்பேர்

முன்னுக்குப் பாத்தி தாண்டிப் போகும்போது ஒருத்தி தளுங்கிவிட்டால் சிரிக்க மாட்டார்களா? 'இவ்வளவுதானே' என்று கேலிக்கு இடமாகி விடுமே! எந்த ரோசக்காரிதான் 'அத்துவானம்' என்ற பட்டத்தைச் சுமக்க சம்மதிப்பாள்?

இப்படி இளமான்கள் போல் அவர்கள் செடிகளுக்கிடையே துரித மாகப் போய்க் கொண்டிக்கையில் நாகம்மாள் என்ன செய்கிறாள் என்பதைக் கவனிப்போம். அவள் இரண்டு பாத்தி எல்லோரிடத்தும் சரியாகப் பேசுவாள். பின்பு தங்கிக் கொள்வாள், அப்புறம் பருத்தி எடுக்க ஆரம்பிப்பாள். ரொம்பக் களைப்படைந்தவள் போல் உட்கார்ந்து கொள்வாள். இவளது தளர்வைக் கண்டு பக்கத்தில் வருவோர் சலித்துப் போய்விட்டாள் என்று நினைக்கவில்லை. ஏனென்றால் நாகம்மாவை மிஞ்சி யாரும் ஒரு அடி எடுத்து வைக்கமுடியாது. இது மட்டுமல்ல எந்த வேலையிலும் கெட்டிக்காரிதான். ஆனால் இன்று என்ன வந்து விட்டது?

'என்ன நாகம்மா, காலில் ஏதாச்சும் கட்டை பட்டுட்டதா? என்றாள் கூட நின்ற பெரியவள்.

ஒருத்தி 'அக்கா அக்கா' "இந்தப் துணியெ நனைச்சுச் சுத்து" என்று சிகிச்சைக்கு உதவ முன்வந்தாள். கணநேரத்தில் காடே இவள் பக்கம் திரும்பிவிட்டது. நாகம்மாளுக்கு என்ன? நாகம்மாளுக்கு என்ன? என்ற குரல்களுக்கு எதிரொலிக்கு எதிரொலி கிளம்பியது. இதற்குள் ராமாயி ஒட்ட ஓட்டமாக ஓடிவந்து "என்ன அக்கா? எப்படி இருக்கு. தண்ணி குடிக்கறயா" என்று பதட்டத்துடன் கேட்டாள்.

நாகம்மாள் ஒன்றையும் கவனியாதவள் போல "எப்படியோ வெடு வெடுப்பாய்' வருது" என்றாள். காட்டுவேலை செய்கிறவர்களுக்கெல்லாம் சாதாரணமாக 'வெடு வெடுப்புத்தான் வருவது வழக்கம். அப்படிச் சொன்னாத்தான் உடனே பக்கத்தில் இருப்பவர்கள் அப்படியானால் ஏறு வெய்யிலில் நிற்கக்கூடாது நிழலிற்குப் போய் உட்கார்ந்து கொள் என்பார்கள். இந்த வெடு வெடுப்பிலே தலை சுற்றல், மயக்கம், வாந்தி கண்ணடைப்பு எல்லாம் அடங்கியிருக்கிறதென்றால் அவ் வியாதியைப்பற்றி

நாம் அதிகமாகச் சொல்லத் தேவையில்லை. இதற்குள் ஒரு பெண் ஒரு செம்பு தண்ணீருடன் ஓடி வந்தாள். ராமாயி அதை வாங்கி "இந்தாக்கா குடி" வாந்தி வராப்பலிருக்குதா? என்றாள் துக்கமாக.

இன்னும் பல குரல்கள் அதே கேள்வியை அதே தொனியில் சற்று ஏற்றியும் இறக்கியும் கேட்டார்கள். நாகம்மாளின் பதில் மௌனம் என்பதைச் சொல்லாமல் விட்டுவிடுவதே மேல். ஆனால் இந்த நடிப்புக்குப் பிறகு என்ன நடந்தது. என்பதையும் பார்ப்போம்.

நாகம்மாள் ஒரு வாய் தண்ணீரைக் குடித்துவிட்டு "போதும் போதும் தேவலாம். நீயே பார்த்துக்கிட்டு வந்து சேரு. முத்தாயா, செடி கொடிகளுக் குள்ளே போகப் போறா. கவனமாய் பார்த்துக்கோ நா ஊட்டுக்குப் போறே" என்று ராமாயிடம் கூறிவிட்டுக் கிளம்பினாள். தோட்டத்தைத் தாண்டி அவர்கள் கண்ணுக்கு மறைந்ததும் நாகம்மாளுக்கு இந்த ஓட்ட நடை எங்கிருந்து வந்ததென்று கேட்காதீர்கள்.!

## 12

நாகம்மாள் நேராக வீட்டுக்கு வந்ததும் தாவாரத்தில் செருகியிருந்த சாவியை எடுத்து மளமளவென்று பூட்டைத் திறந்து உள்ளே போனாள். உடனே அடுக்குச் சந்தருகே எதையோ எடுக்கப் போனவள் அருகிருந்த கண்ணாடிச் சுவரின் மேல் கை வைத்தாள். அவள் கைபட்ட வேகத்தில் அங்கிருந்த மயிர் கோதி 'சொத்' தென ஒரு மண்பானை மேல் விழுந் தது. அந்தப்பானை உடைந்ததா தூர் விட்டதா என்பதைக்கூட அவள் கவனிக்க வில்லை. ஒரு பானைக்குள் கையை விட்டு என்னவோ துணியிற் சுற்றியிருந்த முடிச்சை எடுத்துக் கொண்டு கதவைக் கூடச் சாத்தாமல் ஆற்றங்கரைப் பக்கம் நடந்தாள்.

கீழே மண் வெகு வேகமாகச் சூடேறிக் கொண்டிருந்தது. சுற்றுப்புற மெங்கும் ஒரே மௌனம். ஒரு வீட்டிலும் துளி கூடச் சத்தம் கிடையாது. திண்ணையிற் படுத்திருக்கும் இரண்டொரு கிழவர்கள் இருமுவதுதான் இலேசாகக் கேட்டுக் கொண்டிருந்தது. நேரம் தப்பிக்

கூவும் சேவல்களைத் தவிர அப்போது அரவம் செய்ய யாரும் இல்லை. சின்னஞ் சிறுசுகளும் தங்கள் தாயாரின் பின்னாலேயே காடுகளுக்கு ஓடிப்போயிருந்தன. நாகம்மாள் ஆற்றுக்குப் போகும் பாதையை விட்டு மேட்டில் ஏறி நடந்தாள். காலில் செருப்பில்லாததால் அவ்வப்போது முட்கள் குத்தும்போது நிற்கவேண்டி இருந்தது. இச்சிறு தாமதத்தையும் பொறுக்காது அவள் முகத்தைச் சுளிப்பதிலிருந்தும், மேலெல்லாம் வியர்வை வழிவதிலிருந்தும், அவளுடைய பாய்ச்சல் நடையிலிருந்தும், ஏதோ முக்கியமான காரியமாகத் தான் போகிறாள் என்பது விளங்கும். ஆனால் பருத்திக் காட்டில் வெடு வெடுப்பென்று வேஷம் போடுவானேன்? இப்போது எங்கே போகிறாள்? வீட்டிலிருந்து எடுத்துச் செல்வதென்ன? என்ற கேள்விகளுக்கு ஒரே யடியாகப் பதில் சொல்வதென்பது சிரமம். ஆனால் உச்சி வேளையில் மடுவுத் தோப்புக்குப் போகிறாள் என்பதையும் அதுவும் கெட்டியப்பனைக் காணத்தான் என்பதையும் தெரிவித்து விடுகிறோம்.

மடுவுத் தோப்பு என்ற பெயரைக் கேட்டாலே அந்தப் பக்கத் திலுள்ள பெரியவர்களும் அப்பாடா' என்று வாய் மேல் கை வைப்பார்கள்.

ஆற்றுக்கப்பாலே, வெங்கக் கற்காடு, வெகு தூரத்துக்குப் பயிர், பச்சை சாகுபடிக்கே லாயக்கற்று நீண்டு கிடக்கிறது. அதற்கப்புறம் ஊசிப்புல் என்ற ஒருவகைப் புல் படர்ந்திருக்கிறது. சாதாரணமாக அங்கெல்லாம் மழைக்காலத்தில் புல் இன்னும் அடர்த்தியாக தளிர்த்து நிற்கும். அப்புற் காட்டிலே மாடு கன்றுகளை மேய விடுவது வழக்கம். அக்காட்டிற்கு அப்பால் கொஞ்ச தூரம் ஒரு அடர்ந்த சோலை. பலஜாதி மரங்கள் ஒன்றோடொன்று இணைந்து நீண்டு வளர்ந்திருக்கும் அந்த இடம் சதா இருண்டிருக்கும். ஒரு புறம் ஆறு மறு புறம் விஸ்தாரமான மேட்டங்காடு. எதிராக பின் இரு புறங்களிலும் சிறுசிறு குன்றுகள் இப்படியாக அந்த மடுவுத்தோப்பு மனிதப் போக்குவரத்துக்கே அதிகம் உபயோகப்படாத நிர்மானுஷ்ய பூமியாக இருந்து வந்தது. யாராவது தப்பித் தவறி பண்டப் பாடிகளைவிட்ட சிறுவர்கள்கூட உள்ளே செல்ல அஞ்சுவார்கள். இல்லாத பொல்லாத மிருகங்களெல்லாம் அங்கு உலாவு வதாகக் கதைகள் உண்டு. இன்னொரு முக்கியமான பயம் அங்கு என்னவென்றால் கரைக்கு எதிர்ப்புறத்திலுள்ள சுடுகாட்டுப் பேய்களெல்லாம்

வாசம் செய்வது அந்த இடத்திற்தான் என்ற நம்பிக்கை. ஆனால் கெட்டியப்பன் போன்றவர்கள் இதையெல்லாம் தூசு போல ஊதிவிட்டு 'நெறு நெறு' என்று உள்ளே நுழைவார்கள். அப்படித் தைரியமாக உள்ளே நுழையா விட்டால் அந்த இருண்ட பிரதேசத்தில், அவ்வளவு அடுப்புக் கற்களும், சட்டிகளும், எலும்புகளும் ஏது? ஒரு பட்டியிலே ஆடு திருட்டுப் போய் விட்டதென்றாலோ, வீட்டிலிருந்து கோழி களவு போய் விட்டதென்றாலோ, இன்னும் அரசாணிக்காய், வாழைக்காய்,அது இது எல்லாம் காணாமற்போன அடுத்தநாள் நிச்சயம் இந்த இடத்தில் ஏதாவது அடையாளம் இல்லாமல் போகாது.

நாகம்மாள் அங்குதான் இப்போது முக்காட்டை எடுக்காமல் மும்முரமாகப் போய்க்கொண்டிருந்தாள். காட்டு யானையே எதிரில் வந்திருந்தாலும் நிறுத்த முடியாத அவளைப் பக்கத்தூர் உபாத்தியாயர் நிறுத்தி விட்டதுதான் ஆச்சரியம். ஆனால் பலத்தில் யானையைத் தோற்கடிக்க முடியாவிட்டாலும் அப்புலவர் பெருமான் இரண்டு யானைக்கு ஒரே சமயத்தில் குழி வெட்டக்கூடிய அவ்வளவு சமர்த்தர். வாத்தியாரே அவசரமாப் போறேன் என்று நாகம்மாள் நகர்ந்தாள்.

"ரொம்ப அவசரமா?"

"ஆமா ஆமா!" என்று கூறிக்கொண்டே நிற்காது போனாள்.

" ஒரு பேச்சு" என்று கெஞ்சும் குரலில் பின் தொடர்ந்தார்.

'இல்லே வாத்தியாரே வெகு அவசரம்'

"நானும் ரண்டு வார்த்தையிலே முடிக்கிறேன் ஒரு நாலு வள்ளம் கம்பு வேணும் ஆனால் ஆரிருந்தாலும் நம்ம வளவிலே சொல்லோணுமா? அதென்னமோ நா புறப்பட்டவேள கும்புடப் போன தெய்வம் குறுக்க வந்தாப்பல" என்று அடுக்கிக் கொண்டே ஓடிவந்தார் புலவர் பெருமான்.

அந்தச் சமயத்தில் நாலு வள்ளமல்ல. நாற்பது வள்ளம் கேட்டிருந் தாலும் கூட நாகம்மாள் கொடுப்பதாக வாக்களித்திருப்பாள். ஏனென்றால் அவ்வளவு அவசரத்தில் இருந்தாள் அவள்.

"அதற்கென்ன காரத்தாலே வந்து வாங்கிக்குங்க" என்று அவரை வழியனுப்பினாள். பின்னர் மேட்டிலிருந்து இறங்கி ஆற்று மணலில் அடியெடுத்து வைத்தாள்.

## 13

ஆற்றில் பாதத்தளவு ஜலம் 'குருகுரு' வென ஓடிக்கொண் டிருந்தது. சில இடங்களில் பாறையோரத்தில் முழங்காலளவு ஜலம் கூட நின்றிருந்தது. அங்கெல்லாம் ஆற்றுநீரிற் சின்னஞ் சிறு மீன்கள் துள்ளி விழுந்து கொண்டிருந்தன. அவற்றைச் சமயம் பார்த்து அடித்துக் கொண்டு போவதற்கு இரண்டொரு கொக்குகளும், வேறு சில பட்சிகளும் கரையோரத்தில் உட்கார்ந்திருந்தன. நாகம்மாள் அக்கம் பக்கம் பார்த்துக்கொண்டே தோப்பினுள்ளே அடியெடுத்து வைத்தாள். அவள் இப்போது போய்க்கொண்டிருக்கும் இடம் சற்று வழுக்கலான பாதை. ஆற்றங்கரை மேட்டிலிருந்து நீர்வரை பெரும் பாறை பாசி பூத்து புல்லும் பூண்டும் நிறைந்திருந்தது. அங்கே ஜாக்கிரதையாகத்தான் காலடி எடுத்து வைக்க வேண்டும். கொஞ்சம் தவறினாலும் முழங்கால் உடைந்து விடும். நாகம்மாளுக்குச் சொல்ல வேண்டுமா? காந்தப் பூமியை இரும்பு பற்றியிழுப்பது போலல்லவா அவள் பாதங்கள் ஒட்டிப் போகின்றன. கணத்தில் பாறை தாண்டி மேலே நடந்தாள்.

இனித்தான் வெளிச்சத்திலிருந்து இருட்டிற்கு வந்த தடுமாற்றம் ஏற்படும். ஆனால் பழக்கமானவர்களுக்கு இது ஒரு பொருட்டேயல்ல. நாகம்மாளின் வீச்சுநடையிலிருந்து இதற்கு முன்னும் அவள் இங்கு வந்து பழகியிருக்கிறாள் என்று தெரிகிறது. அப்போது நல்ல மத்தியான வேளைக்குக் கிட்டத்தட்ட ஆகிவிட்டதென்றாலும் அங்கு 'கருகும்' மெனவே இருந்தது. அவ்விடத்தில் ஒரு மனிதனல்ல மலையே இருந்தாலும் வெளியில் உள்ளவர்கள் பார்த்துத் தெரிந்து கொள்ளமுடியாது. நாகம்மாள் நேராகப் போய்க்கொண்டிருந்த பெரிய வழியை விட்டு, குறுக்கு வழியாக ஒரு சந்துக்குள் புகுந்தாள்.

சிறிது தூரத்தில் ஒரு சமசதுரமான இடத்திற்கு வந்தாள். மறைவான அவ்விடத்தில் ஒரு சிறு மைதானம் பூசி வழித்த களம் போல அவ்வளவு சுத்தமாக எப்படி இருக்கிறதென்ற சந்தேகம் எழலாம். அந்த இடம் இரண்டொரு வருஷத்துக்கு முன்பெல்லாம் ஒரு காரியத்துக்காக உப யோகிக்கப்பட்டு வந்தது. ஆனால் பொலீசாரின் ஒரு நாளையப் பிரவேசத் தால் சட்டி முட்டிகளும், வேலாம் பட்டைகளும், மூங்கில் குழாய்களும் இன்னும் கட்டுப்பானைச் சாராயம் காய்ச்சுவதற்கு வேண்டிய உபகரணங் களும் கைப்பற்றப்பட்டன. பின்பு அந்த இடத்திற்கு அவ் வளவாகப் போக்குவரவு இல்லை. தன்னுடைய உல்லாச நண்பர்களை இழந்து விட்டதனாலோ என்னவோ அந்தஇடமும் வரவரச் சோபை இழந்து வருகிறது.

அந்த மைதானத்தைக் தாண்டி சிறிது தூரத்தில் இரண்டு நாகமரம் கிட்டக் கிட்ட முட்டிக்கொண்டு இருக்கின்றன. அங்கு வந்தவுடன் நாகம்மாள் தன் வீச்சு நடையை நிறுத்திவிட்டு மரத்தடியில் உட்கார்ந்தாள். அதே சமயம் ‘வந்திட்டாயா?’ என்ற குரல் எங்கிருந்தோ வந்தது.

என்ன இது? இந்தக் தனியிடத்தில் யார் இப்படி அழைப்பது பேயா, பிசாசா, காட்டேறியா, அல்லது வன தேவதைதானோ என்ற சந்தேகம் வேண்டாம். இதோ அந்தக் குரலுக்குச் சொந்தக்காரனான கெட்டியப்பன் கீழே இறங்கி வருகிறான்.

“நான் வெகு நேரமாகப் பாத்துக்கிட்டிருந்தேன்? ஏன் இவ்வளவு நேரம்? தடத்திலெ ஆருகிட்டயோ நிண்ணு பேசிக்கிட்டிருந்தாயே? என்று கெட்டியப்பன் கேட்டான்.

“என்ன இங்கிருந்து தெரியுதா?”

“ஆமா உச்சாணிக் கொம்பிலிருந்து பார்த்தேன் சற்று மங்கலாகத் தெரிஞ்சுது”

“உந் தீரமே தீரம்” என்று வியந்துகொண்டே நாகம்மாள் “வெளியில் தலை காட்ட முடியல்லெ” என்றாள்.

"ஏன் அப்படி?"

"என்னத்தைச் சொல்றது? நா இந்தப் பத்து இருபது நாளா வாயே திறக்கிறதில்லெ! பேசாமே என்ன நடக்குதுனு சோதிச்சுப் பாத்தே, பேச்சு அப்படியே தணியுது"

"நீ சொல்றது ஒண்ணுமே தெரியலெ! என்றான் கெட்டியப்பன்.

"இதுக்கு ஒரு வழி சொல்லு" இனி என்னாலே அவுங்களோடு சேர்ந்திருக்க முடியாது. 'அவனும் அவெ பெண்டாட்டியும் எக்கேடோ கெட்டுப் போகட்டும். அதப்பத்தி துளியும் எனக்கு அக்கறையில்லெ. பிரிஞ்சு வந்தாலே போதும்."

"நானும் அதெத்தானெ சொல்லீட்டிருக்கறெ" என்றான். கெட்டியப்பன்.

"ஆமா இன்னும் எத்தனை நாள்க்குப் பேசாமலே இருப்பது?"

"ஏ? நீ சொல்லலயா? நேராச் சொல்றது தானே! தெரிஞ்சு போகுது".

"எப்படிச் சொல்றதின்னுதான் எனக்கு கயிடமா இருக்குது. ஏ சொல்லாமலே உட்டு உடலாமின்னு கூடப் பாக்கிறே".

"சே, சே அதுக்குத்தானா இமுட்டுக் கூடிப் பேசியது. கடசிலெ இப்படிச் சொல்லுவீன்னு தெரிஞ்சிருந்தா நா முன்னுக்கு வந்திருக்கவே மாட்டே!" என்று சலிப்போடு கூறினான் கெட்டியப்பன்.

"நீ அப்படி என்னெ நெனக்காதே, நா கேட்டுடுறே அங்கயே"

"அங்கண்ணா எங்கே, சின்னப்பங் கிட்டத்தானே? என்று அவன் அவசரமாகக் கேட்டான்.

"ஆமா" என்று நாகம்மாள் தலை அசைத்தாள்.

"சரிதா, மொதல்லெ என்னவோ சொன்னயெ அது என்ன? ஆர் என்ன சொல்றாங்க?"

"ஆரா? காலுக்கு வராத சில்லரைகள். அந்த வெட்டிப் பேச்சுப் பேசுது. நா பக்கத்தை பிரிக்கச் சொன்னா முடியாதிண்ணு சொன்னா நா என்ன செய்யறது?"

"என்ன செய்யரதா? அப்புறம் சின்னப்பெ ஏத்துப் பூட்டிடுவானா? தண்ணி காடு பாஞ்சிடுமா? அவ தோட்டத்துக்குள்ள கால் எடுத்து வைச்சுறமுடியுமா?" என்று கோபமாகக் கேட்டான் கெட்டியப்பன்.

"இதெல்லாம் வம்புதானே?"

"இதில் வம்பு கிம்பு ஒண்ணுமில்லே. அவன் ஒழுங்கா ஒத்துவராமே போனா தானே வம்பு தேடிக்கிறான். நீ வம்புக்கு ஒண்ணும் போகலியே! இதிலெ தப்பென்ன? உம் புருஷன் சம்பாதிச்சதிலே உனக்குப் பாகம் இல்லையா? இப்படி நீ சும்மாவே இருந்தா அவ தோட்டங்காடெல்லாம் வித்துக்கிட்டு மாமியார் ஊரு போயிடறான். அவ போட்ட மாயப் பொடி தானே இது."

"ஆமா ஆமா! நீ சொல்லறது சரிதா. அந்த முண்டெ வந்து போனதுக்கப்புறம் தானே எனக்கு விசயம் பூரா தெரிஞ்சுது, எப்படியோ ஒரு தப்புத் தண்டா இல்லாமே காரியம் ஆனாப் போதும்.

"அதைப்பத்திக் கவலைப்படாதே. நா அப்படி உன்னெ மாட்டீடு வானா? வீணா நீ ஏ அங்கலாய்க்கிறாய்? சட்டு புட்டுனு காரியத்திலே கண்ணாயிருந்து சாதிக்கப்பாரு. வீணா நாளெ ஓட்டாதே," என்றான். கெட்டியப்பன்.

"அப்படியே ஆகட்டும், நீ மற்றவங்க கிட்டையும் இதைப்பத்தி கலந்துக்க. அவுங்க என்ன சொல்லறாங்க பார்ப்போம்." "என்ன மணியகார அண்ணங்கிட்டதானே? நல்லாச் சொன்னாய், அவங்க இதுக்கு அட்டி சொல்ல மாட்டாங்க' என்றான் கெட்டியப்பன்.

"என்னமோ அப்பா, நீ எல்லாம் பார்த்து என்ன எப்படிச் சொல்றீங் களோ அப்படிச் செய்றே எங்கிட்ட வஞ்சகம் இல்லை. அதுதா சொல்ற தெல்லாம் சொல்லீட்டே நான் போறே," என்று கிளம்பினாள் நாகம்மாள்.

'செரி செரி' சொன்னதெல்லாம் மனசிலிருக்கட்டும். ஏனோ தானோண்ணு இருந்திட்டா கடைசிலெ நீயும் உம் மவளும், ஓடு எடுக்க வேண்டியதுதான்." என்று எச்சரித்துவிட்டு "நானும் கூடவாறே போ வேண்டி யதுதா என்று புறப்பட்டான்."

"நல்ல கூத்து, நா போறமட்டும் இங்கேயே இரு. இது வேறெ ஆராச்சும் கண்டாக்காப் போச்சு. ஊறு தின்னா பறக்கிறதின்னு சொல்லும் சனங்கோ, அப்புறம் என்ன வேணுமானாலும் ஆரம்பிச்சிடுவாங்க" என்றாள்.

அப்படி எவனாச்சும் வாயசைச்சா குதிக்காலு நரம்பெ வெட்டீட மாட்டனா? நீ ஒண்ணுக்கும் அதறாதே என்றான் கெட்டியப்பன்.

"நானு அப்படித்தா மிரட்டிக்கிட்டு வாறே" என்று கூறிக்கொண்டே நாகம்மாள் நடந்தாள்.

## 14

யாருடைய வருகைக்கு முன் தன் காரியத்தை முடித்துக்கொள்ள நாகம்மாள் எண்ணியிருந்தாளோ, எவருக்குச் செய்தி எட்டுமுன்பே எல்லா வற்றையும் தீர்த்துக்கொள்ள ஆலோசித்தாளோ, எந்த முகத்தைக் காணுமுன்பே பிரிந்துவிட நினைத்தாளோ அந்த முகம் இன்று பிரசன்னமாகி விட்டது. சின்னப்பனுடைய மாமியார் ஊரிலிருந்து வந்திருந்தாள். அந்த அம்மாள்தான் இவ்வளவு கசப்புக்கும் காரணம். அவளே இக் கிளர்ச்சியை முதலில் கிளப்பி விட்டவள்.

போன வருஷத்தில், மகளைப் பார்த்துவிட்டுப் போக வந்திருந்தவள், பேச்சுவாக்கிலே கெட்டியப்பனிடம் "ஊருக்குள்ளே கச்சிபெலமா இருக்கு தாம்" என்றாள். அப்போதெல்லாம் கெட்டியப்பன்

அடிக்கடி வீட்டுக்கு வருவது கிடையாது. எப்போதாவது ஒருநாள் வருவான். சின்னப்பனிடம் வெளியிலிருந்தே பேசிவிட்டுப் போய்விடுவான். அவன் அடாவடிப் பேர்வழிதான், கவைக்காகாதவன் தான், இருந்தாலும் இரண்டு கட்சிக்கும் பொதுவாக நடந்து கொள்வதில் விருப்பமுள்ளவன். இல்லாவிட்டால் இரண்டிடத்திலும் செல்வாக்குப் பெற முடியாதல்லவா? இப்படிப்பட்ட ஆளைத் தன் மருமகன் கட்சியில் சேர்த்துவிடச் செய்த முயற்சியின் விளைவுதான் இது. கெட்டியப்பன். இதைப் பயன்படுத்திக் கொண்டு, நா இருக்கிறபோது எந்தப்' பயல் வாலாட்டுவான்? "நீங்க கவலைப் படாதீங்க" என்றான். காளியம்மாள் அதாங் கேட்டே நீங்கல்லா இவ்வளவு அனுசரணயா இல்லாட்டி இருக்கிற பூமிய வித்திட்டு மகளயும் மரு மகனையும் எங்கூருக்குக் கூட்டிக்கிட்டு போயிடலாமினு பார்த்தே பாவம்! ஒண்டிக்காரனெ இத்தன கசக்கு முசக்குக்குளே ஏந் தனியாவுட்டு வைக்கோணு?

நா இருக்கிற, அங்கும் பண்ணையும் பாச்சலையும் பாத்துகிட்டு பையனுக்குத் தொணையா இருப்பாங்களேன்னு பாத்தா எனத் தொடர்ந்து பேசினாள்.

கெட்டியப்பன் சமயம் பார்த்து "நாகம்மா சங்கதி என்ன? என்றான்.

"அவளுக்கென்ன வந்துட்டுது? இருந்தா வீட்டைக் காத்துகிட்டு இங்கிருக்கிறா, இல்லாதுபோனா அங்கதா வாறா? இனி அவளுக்கென்ன சாகிற வரைக்கும் சோறும் சீலையும் தானேகொழந்தை பெரிசானா சித்தப்பெ இருக்கிறாங்க கண்ணாளம் கட்சி எல்லாம் பார்த்துக்கறாங்க இங்கென்னா பத்துப் கொழந்தெயா இருக்குது?"

கெட்டியப்பனுக்கு அப்பொழுது தோன்றிய யோசனைதான் நாகம் மாளை பங்கு கேட்கத் தூண்டிவிட்டு இவ்வளவு தூரத்துக்கு வந்திருக் கிறது.

தன்னுடைய தாயார் ஊரிலிருந்து வந்திருக்கிறாள் என்றால் எந்தப் பெண்ணுக்குத்தான் சந்தோஷம் இல்லாமலிருக்கும்? ராமாயி

சிரிப்பும் விளையாட்டுமாய் பூரித்துப் போனாள். குழந்தையை எடுத்துக் கொஞ்சு வாள். அதே சமயம் மேல் உலைத் தண்ணீரை எடுத்து புளி கரைத்துக் கொள்ளுவாள். வாசலுக்குப்போவாள். வீட்டுக்குள் வருவாள். அப்படியே தன் தாயாரிடம் கேட்டதும் விட்டதுமாய் இரண்டொரு பேச்சு பேசிக் கொள்வாள். இப்படியாக உற்சாகத்தில் தேக்கித் திளைத்துக் கொண்டி ருந்தாள் ராமாயி. ஆனால் நாகம்மாளோ மூன்றாவது மனுஷியைப்போல 'வாம்மா' என்று கேட்டதைத் தவிர வேறு வார்த்தையே வைத்துக் கொள்ளவில்லை. என்னவோ பெரிய வியாதி வந்துவிட்டவர் களைப் போல பெரிய துப்பட்டியை எடுத்துப் போர்த்தி ஒரு மூலையில் படுத்துக் கொண்ட ாள். ராமாயி; சாதத்துக்கு என்ன போடறதக்கா? என்று பல தடவை கேட்டபிறகு. "என்னெ கட்டைலே வைச்சிட்டா ஆரைப்போய்க் கேப்பாய்? என்று கடிந்து மொழிந்தாள்.

இந்த வார்த்தைகளைப் பாதி கேட்டும் கேட்காதவள் போல விஷயம் விளங்காத காளியம்மாள் 'ஒடம்புக்கு ஒண்ணுமில்லையே" என்று நெற்றியில் கை வைத்துப் பார்த்தாள். சௌக்கியமாய் இருக்கிற தேகத்தில் என்ன தெரியும்? எப்போதும் போலவேதான் உடம்பு இருந்தாலும் காளியம் மாள் கொஞ்சம் கனகனப்பா இருக்கறாப் போலிருக்குது. வட்டச் சேரை கொத்தமல்லியைப் போட்டு கசாயம் வச்சுக் கொண்டு வரட்டுமா? என்றாள். "எனக்கு ஒரு பண்டிதமும் வேண்டாம்" என்ற ஒரே பேச்சில் சொல்லிவிட்டு நாகம்மாள் இழுத்துப் போர்த்துக் கொண்டாள். காளியம் மாளுக்கு விஷயம் கொஞ்சமாக விளங்கிற்று. அதற்குள் ராமாயி தன் தாயாரின் கையைப் பிடித்து வெளியே கூட்டிவந்து "இந்த இரண்டு மாசமா இந்தக் கூத்துத்தா இன்னஞ் சங்கதி எல்லாகேட்டா நீ இங்கே பச்சத்தண்ணி கூட வாயிலை ஊத்தாமலெ இப்போதே போயிடுவாய்" என்று தன் தாயாரிடம் சொன்னது. நாகம்மாள் காதிலும் லேசாசப் பட்டிருக்கவேண்டும். அதனால் தானோ என்னவோ போர்வையை எடுத்து எறிந்து விட்டுக் களைக் கொத்தையும் கூடையையும் எடுத்துக்கொண்டு "புல்லுக்குப் போறே நீ எங்காச்சு வீட்டுக்கு வெளியிலே காலே எடுத்து வெச்ச பாத்துக்கோ? என்று தன் மகளை எச்சரித்து விட்டுப் புறப்பட்டாள்.

"இதென்ன நோவம்மா? வந்தபடியே போயிட்டுதே, 'திப்புதிப்புனு' "புல்லு கொண்டாரப் போறாளே!" என்று காளியம்மாள் ஆச்சரியப்பட்டாள்.

# 15

காளியம்மாள் வந்து இரண்டு வாரமாயிற்று. அவள் இன்னும் எத்தனை நாளைக்கு இருப்பாள் எப்போது போகப் போகிறாள்? எதற்காக வந்திருக்கிறாள்? என்ன பேச்சுவார்த்தைகள் நடக்கிறதென்ற விபரமெல்லாம் மர்மமாகவே இருந்தது. குடும்பத்தில் எவ்வித அதிர்ச்சியும் இல்லை. குமுறல் கொந்தளிப்பின்றி அமைதியாக சென்று கொண்டிருந்தது. இந்தச் சமயத்தில் அடைமழை காலமும் வந்து சேர்ந்தது. புரட்டாதி கழிந்து ஐப்பசி ஆரம்பம் வானவீதியில் என்னேரமும் சாயை படிந்து கருமுகில்கள் கவிழ்ந்தவண்ணம் இருந்தன. திடீரென்று மழை கொட்டும் அடுத்த கணம் 'கம்' என நின்றுவிடும். எதையோ நினைத்துக் கொண்டதைப்போல மறுபடியும் 'சோ சோ' வெனத் துளிக்கும். இப்படிப் பெய்யும் மழையைப் பார்க்கும்போது யாரோ ஒரு தாய், தன் வாலிப மகனைப் பறி கொடுத்ததை எண்ணி ஏக்கத்தால் பலபல வென்று நின்று நின்று கண்ணீர் விடுவதைப் போலிருந்தது.

இங்ஙனம் அடைமழை சொல்லாமல் கொள்ளாமல் வந்தாலும் பட்டி தொட்டிக்குப் போகிறவர்கள் நிற்கவே இல்லை ஓலைக் கூடைகளையோ பனந் தட்டுகளையோ அல்லது கோணிப் பைகளையோ போட்டுக் கொண்டு தங்குதடையின்றி அவரவர் வேலைகளைக் கவனித்துக் கொண் டனர். வயதுவந்த கிராமச் சிறுமிகள் ஆடைகளைச் சரியாகக்கூட மார்பில் போடாமல் சில்லிட்ட சாரலில் இட்டேறித் தடத்தில் செல்லும் காட்சியே காட்சி! ஆட்டு மந்தைகளின் பின்னாலே வேலியோரங்களிலோ, காட்டின் நடுவிலோ வாரி வழிகளிலோ அவர்கள் செல்வதைப் பார்த்தால் எங்கோ மாய உலகத்திலிருந்து வந்த மதன மோகினிகள் திரிந்து கொண்டிருப் பதைப் போலிருக்கும்.

இக்கூட்டங்களுக்கு மத்தியில் சின்னப்பனும் கலந்திருந்தான். அரை நாழிகை வீட்டில் சாய்ந்து உட்கார்ந்திருக்க மாட்டான்.

ஒருநாள் ராத்திரி சின்னப்பன் சாப்பிடும்போது காளியம்மாள் என்னவோ 'குசு குசு' வென்று சொல்லிக் கொண்டிருந்தாள். ராமாயி கிட்டத்தில் தான் நின்று கொண்டிருந்தாள். "எஞ் சொந்தப் புள்ளெயோட

சொல்றாப்பலே சொல்றெ, இன்னங் கொஞ்ச நாளில் பாருங்க நாகம்மா உன்ன கூத்துடப் போறா."

சின்னப்பன் சாதத்தைப் பிசைந்து கொண்டே என்னவோ யோசனை யிலிருந்தான். "எங்கிட்டெ நடந்துக்கிறதிலிருந்தே தெரிகிறதே. எல்லாங் கூடி எப்படியோ சதி பண்ணிப் போடுவாங்க. வேணுமானா நெசம் பொய் பின்னால் பாருங்க." என்ற காளியம்மாள் மிகவும் தணிந்த குரலில் சொன்னாள். ராமாயி அதையெல்லாம் வேடிக்கை பார்ப்பதைப்போல பார்த்திருந்தாள்.

"அதற்கு என்ன பண்றது?" என்றான் அவன். "அதுக்குத்தா போயுமிடலாமிங்கிறே போவத்தாவேண்டுமிங்கிறே" என்றாள் சற்றுப் பலமாகவே .இந்தச் சமயத்தில் நாகம்மாள் உள்ளே நுழையவே பேச்சு வேறு வழியில் திரும்பியது. "போவத்தா வேணுமெங்கிற. இதுக்குப் பட்டறைக்குப் போகாமே போனா ஆசாரி உருளெ செய்தாப் போலத்தா. நாளைக்கு எப்படி ஏத்துப் பூட்றது?" என்று அந்த வாக்கில் பேச்சு சென்றது.

ஆனால் நாகம்மாளுக்கா இந்தத் தில்லுமுல்லு எல்லாம் தெரியாது? வார்த்தை துளிகூட கேட்காது போனாலே ஊகித்து விடக் கூடியவள். அரையுங் குறையுமாகக் கேட்டுக் கொண்ட பிறகு எப்படி மாற்றினால் தான் வேறு ஏதோவென நினைக்கவா போகிறாள். ஒன்றும் தெரியாதவள் மாதிரி, "அதுக்குப் போகாட்டி என்ன? அப்புறமாச் சொல்லி உட்டாப் போவுது" என்றாள் நாகம்மாள். ஆனால் ஆசாரி உருளை செய்து இரண்டு நாள் ஆயிற்றென்றும் இன்று காலையில் சின்னப்பன் அந்த உருளையில் தான் ஏற்று இறைத்து வந்திருக்கிறான் என்பதும் இவர்கள் இருவருக்கும் தெரியாது. நாலு நாளைக்கு முன் கேட்ட விஷயத்தி லிருந்தே இவ்வளவு பேச்சும் நடக்கலாயிற்று. சின்னப்பன் சிரித்துக் கொண்டே "நமக்கெல்லாம் குளிர் என்றாலே நடுக்கமெடுக்கிறதே! நம் முத்துக்கு ஒண்ணும் செய்யறதில்லையே! என்றான். உடனே நாகம்மாள் 'முத்து, முத்து! என்று தெருவுக்கு வந்தாள். இந்த வேடிக்கையை நினைக்க சின்னப்பனுக்கு அடக்க முடியாத சிரிப்பு வந்தது. அதே சமயம் மற்ற இருவரும் சிரித்தனர். இச் சிரிப்புச் சத்தத்தைக் கேட்ட நாகம்மாள் தன்னைப்பற்றித்தான் பேசிச் சிரிக்கிறார்கள் என்று எண்ணினாள்.

அன்று இரவு படுக்கையில் படுத்துக்கூட நெடுநேரம் இதைப் பற்றியே யோசித்தாள். என்ன பேசியிருப்பார்கள் அவள் எப்படித் தந்திர மாகப் பேச்சை மாற்றுகிறாள் பார். ஜாலக்காரி போவத்தான் வேண்டுமாம்! போடுகிறாளே சொக்குப் பொடியை! போகத்தான் போகுறாளா எல்லாம் வித்துக்கிட்டா? ஐயையோ அப்புறம் என் கதி? சே,சே அப்படி ஒன்றும் என்னை தெருவில் விடமாட்டார்கள். ஆனாலும் அந்தப் பொல்லாத கிழவியிருக்கிறாளே? என்ன பேசியிருப்பார்கள்? நான் இந்த ஒரு வாரமா எப்படியெல்லாம் மனதிலுள்ளதை ஒழிச்சு நடந்து வாரேன். அவளிடம் வெகு விசுவாசமாயிருக்கிறேனே. என்னையா இப்படித் தூற்றுவாள்? உம் .......... யார் கண்டது!

நாகம்மாள் இரண்டொரு தடவை 'சண்டை சச்சரவு' இல்லாமல் அவர்களோடு ஒத்துப்போய் விட்டால் என்ன? என்று யோசிப்பாள். ஆனால் அங்கே போய் பிச்சைக்காரியைப் போல், "நீ போடு ஆயா, நான் திங்க றேன்" என்று காத்துக்கொண்டிருப்பதா இந்த ஜென்மத்திலே இல்லை என்று திடம் செய்து கொள்வாள்.

இந்த இருபது நாளாகக் கெட்டியப்பனைப் பற்றியும் ஒரு சங்கதியும் தெரியவில்லை. இதையெல்லாம். அவனிடம் தெரிவிக்க வேண்டுமென்கிற ஆசை. ஆனால் ஆசாமி ஊரில் இருக்கிறது இல்லாதது தெரியவில்லையே? யாரையாவது கேட்கலாமென்றால் தோதாக எந்த நபரும் காணவில்லை. யாரோ பேசிக்கொண்டார்கள் போனவாரம் ஆற்றில் மீன் பிடிக்கையில் இரண்டு பேரோடு சண்டைக்குப் போய் அடித்து விட்டானாம். அந்தக் கலவரத்தில் கால் வழுக்கி விழுந்து கை முறிந்து விட்டதாம். நாகம்மாள் மனதிற்குள்ளாகவே வேதனையிலாழ்ந்தாள்.

கெட்டியப்பனுக்குக் கையும் முறியாது, காலும் முறியாது நெசமா அவன் திக்கச மாட்டத்தானிருப்பான். அவனுடைய விரோதிகளின் விருப்பமாக்கும் இவையெல்லாம். எதுக்கும் நாளைக்கு மணியக்காரனைப் பார்த்தால் கெட்டியப்பன் சங்கதி தெரிஞ்சுவிடுது. இதுதான் நல்லது! என்று நாகம்மாள் முடிவு கட்டினாள்

காலையில் எதிர்பாராத ஒரு சம்பவம் நிகழ்ந்தது விடிந்ததும் விடியாததுமாய் நாகம்மாள் வெளியே போகும்போது சக்கிலி எதிரில்

வந்தான். நாகம்மாளைக் கண்டதும் கையைச் சொறிந்து கொண்டே "ரொம்பச் சங்கட்டமாய் இருக்குதுங்க" என்றான் நாகம்மாளுக்கு ஒன்றும் புரியவில்லை.

"யாருக்குச் சங்கடம்?" என்றாள்.

"சுல்லிவலசிலிருந்து வாரனுங்க. நம்ம உம் சின்னக் கவுண் டனுக்குத் தானுங்க" என்றான். அப்போது தான் நாகம்மாளுக்குச் சங்கதி தெரிந்தது. காளியம்மாளின் மகனுக்கு எப்போதும் நெஞ்சுவலி உண்டு. ஒரு தடவை தூக்க முடியாத பாரத்தைக் தூக்கியபோது உள்ளுக்குள்ளே சுளுக்கு நரம்பு புரண்டுவிட்டது. அப்புறம் அதற்கு என்ன செய்தும் பூரண குணமாகவில்லை.

இந்தச் சேதி வீட்டில் தெரிந்தவுடன் காளியம்மாள் உடனே புறப்பட ஆயத்தமானாள். அங்கு மிங்கும் ஆவிப் பறந்து திரிவதிலிருந்து எவ்விதம் வருத்தப்படுகிறாள். என்பது தெரியும். இருப்பதோ ஒரே ஒரு மகன். அவனுக்கும் இப்படி வந்துவிட்ட தென்றால் யாருக்குத்தான் துக்கம் இராது? சிறிது நேரத்தில் பயணமாகி விட்டாள். பத்துப் பதினைந்து மைல் தூரம் ஒருத்தியை அனுப்புவதெப்படி என்று சின்னப்பன் கூடப் புறப்பட்டான்.

போகும்போது நாகம்மாளிடம், "நேரத்துக்கு நேரம் மாட்டுக்குத் தண்ணி வெக்க மறந்திடாதீங்க. அந்தக் கெரகத்துக்கு என்ன தெரியும்? பத்திரமா எல்லாத்தையும் பார்த்துக்குங்க. ஊரிலே உட்டதும் மாப்புளெயப் பார்த்துட்டு வந்திடறே" என்று கூறினான். நாகம்மாளும் இது "மெப்புக்கோ, ஒப்புக்கோ" என்று மனத்தில் எண்ணிக்கொண்டு "அப்படியே ஆகட்டும். தம்பிக்கு நல்லானால் அதுவே போதும்." என்று மரியாதையாக வழியனுப்பினாள்.

## 16

தோப்பிலிருந்து பிரிந்து சென்ற கெட்டியப்பன் விவரம் என்ன? அவன் வாக்குறுதி செய்து தந்தபடி காரியத்தில் கண்ணாயிருக்கிறானா?

அவனை நம்பியவள் உருப்பட என்னென்ன காரியங்கள் செய்து வருகிறான்? இவற்றைத் தெரிந்து கொள்ளுமுன் சிவியார் பாளையம் மணியக்காரனைப் பற்றியும் கொஞ்சம் தெரிந்து கொள்ளவேண்டியது அவசியம்.

மணியக்கார ராமசாமிக் கவுண்டர் நல்ல பாராசாரியான ஆள். கருவேலங்கட்டை மாதிரி அவரது காலும் கையும் உறுதியாயிருக்கும். அவரது நிறமும் கருஞ்சாந்து போலத்தான். கிருதா மீசைக்கும், அவரது மேனிக்கும் வித்தியாசமே தெரியாது. அவரது முறுக்கு மீசையில் எலுமிச்சங்கனியை நிறுத்தலாம்! என்ன! நிறுத்தியே காண்பித்திருக்கிறார்! அவருடைய மார்பு கடப்பைக் கல் போன்றிருந்தது. இன்னும் மற்ற அவயவங்களும் கச்சிதமாக அமைந்திருந்தன. அவர் ஏதாவது தேகப்பயிற்சி செய்கிறாரா? இல்லையா என்பது நமக்குத் தெரியாது.

இந்தத் தேகக்கட்டு இவர்கள் வம்சத்திற்குப் பரம்பரைச் சொத்து. இவருடைய தகப்பனாரும் இப்படித்தான் நல்ல ஆஜானுபாகு. எப்போதும் வெளியே போகும்போது நெற்றிக் கட்டுத் தடியுடன்தான் செல்வார். தம்மைக் கண்டவர்கள். குறுகி, ஒடுங்க, எண்சாண் உடம்பும் ஒரு சாணாகப் போக வேண்டுமென்பது அவரது ஆசை. ஆனால் அவரது ஆசை எவ்வளவு தூரம் பூர்த்தியாயிற்று என்பது நமக்குத் தெரியாது.

அந்தக் காலத்தில் சின்னப்பனின் தந்தை ராமசாமிக் கவுண்டர்தான் ஊரிலே என்ன சச்சரவு நடந்தாலும் பஞ்சாயத்துச் செய்து வைப்பார். இதைக்காண ஊர் மணியகாரருக்குப் பிடிக்கவில்லை என்னடா இது? நம்முடைய மதிப்பென்ன? அந்தஸ்தென்ன? என்னேரமும் தோட்டி, தலையாரி வாசலில், காத்துக்கிடக்கிறான்கள், நினைத்தபோது பத்துப்பேர் ‘வா’ வென்றால் வருவார்கள், ‘போ’ வென்றால் போவார்கள். அப்படி யிருக்க ஊரிலே இவன் பெரிய நாயக்காரனாகப் போயிட்டானா! இவனிடம் போய்ப் பந்தக் காலைக் கட்டிக்கொண்டு நிற்பதாம்! இவன் சொல்றதைக் கேட்பதாம். என்ன இது! என்று இப்படி நினைத்தார். அதோடு ராமசாமிக் கவுண்டரை ஒரு கை பார்த்து விடுவது என்று தீர்மானித்துக் கொண்டார். இந்த சங்கை ஊதிவிட்டு நெருப்பாக்க அவரருகே அனேகர் தயாராய்க் காத்துக்கொண்டிருந்தனர். நல்ல யோசனை சொல்லத்தான் சுலபத்தில் யாரும் முன்னுக்கு வரமாட்டார்கள். என்றால், இப்படித் துர்ப்புத்தி சொல்ல

ஆட்களா இல்லை ஏற்கனவே வீராப்பிலிருந்த மணியகாரர், ராமசாமிக் கவுண்டன் தன் எல்லையில் மரம்வெட்டிச் சுண்ணாம்பு சுட்டதை, புறம் போக்கில் மரம் வெட்டிச் சுண்ணாம்பு சுட்டதாகத் தாசீல் தாருக்கு 'ரிப்போட்' செய்தார். இதை விசாரித்த மேலதிகாரி உண்மையை அறிந்து, அப்படித்தான் புறம்போக்காயிருந்தாலும் மரத்தை வெட்டி, அடுக்கி சுண்ணாம்புக் காளவாயில் போட்டுச் சுட்டு, சுண்ணாம்பு எடுத்துப் புதுவீடு கட்டும் வரையிலும், நீர் என்ன ஐயா செய்து கொண்டிருந்தீர்? இது தானா வேலை பார்க்கிற லட்சணம்? என்று மணியகாரருக்கே ஐந்துரூபா அபராதம் விதித்தார்.

இந்தப் பூசலுக்குப் பிறகு எவ்வளவோ குட்டிக் கலவரங்கள் அப்போது தோன்றிய கட்சி, பிரதிகட்சி தான் இன்னும் ஊரிலிருந்து வருகின்றது. தன் தகப்பனார் காலத்தில் தோல்வியானாலும், தானாவது வெற்றி கண்டுவிட வேண்டும். சின்னப்பனையும் அவன் பங்காளிகளையும் பிரித்துவிட்டு மட்டந்தட்ட வேண்டும். என்று கங்கணம் கட்டிக் கொண்டி ருந்தார் மணியகாரர். இதில் அவர் அனேகமாக வெற்றியும் அடைந்து விட்டார். இப்பொழுது சின்னப்பனை என்ன செய்தாலும் கேள்வி இல்லை. அதற்குத் தகுந்தாற்போல நாகம்மாள் சங்கதி வேறு கிடைத்திருக்கிறது. எப்போதும் மணியகாரருக்கு யோசனை சொல்வதற்கு அனேக மந்திரிகள் உண்டு. அவர்களில் முதன்மையானவன் நாராயணமுதலி. இவன் புளுகுணி குண்டுப் புரட்டன், எங்கு என்ன நடந்தாலும் துளிவிடாது வந்து சொல்லி விடுவான். இதற்கு இப்படிச் செய்ய வேண்டும். அவர்கள் சங்கதி அப்படி. அது இது என்றெல்லாம் யோசனை சொல்வான். மற்றவர் யோசனையானால் மணியகாரர் நிராகரித்து விடுவார். ஆனால் நாராயணசாமி முதலியார் விஷயம் அப்படியல்ல. பொட்டுக் குறித்தாற் போல் சொல்லு வான். எங்கே கல் எறிந்தால் எந்தப் பழம் விழும் என்ற சங்கதியெல்லாம் தெரிஞ்சவன். சாதாரணமாக கோர்ட்டு விஷயங்களில் அபாரத்திறமை மற்றும் சாட்சிக்குச் செல்லும்போது சாப்பிடுவதற்கு எந்த ஓட்டலுக்குப் போனால் ரொம்ப, திவ்வியமாயிருக்கும், குறிப்பிட்ட மனிதர்களை அங்கு அழைத்துச் செல்வது என்பதெல்லாம் மனப்பாடம். அதனாற்தான் மணியகாரர் கூட, அதே, "என்னப்பா நம்ம நாராயணெ சொன்னா எள்ளத்தெனை மாறுமா? அவெ நமக்காக வேலெ வெட்டி எல்லா உட்டுட்டு வாரான்" என்று சொல்லுவார்.

"வேலை என்ன பறக்கிறது" என்று நினைத்துக் கொண்டே "உங்களை விட வேலை என்னுங்க பிரமாதம்?" "நீங்க வரச்சொல்லீட்டா என்ன இருந்தாலும் ஓதறிப் போட வேண்டியது தானுங்க" என்று சமய மறிந்து பேசுவான். "அதுதா நீ இல்லாமலே நா ஒண்ணும் செய்றதில் லையே" என்று 'கடகட' வென்று சிரித்துக் கொண்டே மணியகாரர் சொல் வார். அதுதான் சமயம் என்று ஐந்து பத்து கடனாகக் கேட்டு வாங்கிக் கொள்வான். அப்புறம் திருப்பி கொடுக்கிறதிற்குத்தான் இன்னும் ஐந்தோ பத்தோ வேண்டியிருக்கிறதே! அதையும் மணியகாரனிடமே வாங்கவேண்டி யிருப்பதால் அவரும் முதலியாரிடம் பணம் திருப்பிக் கேட்பதில்லை. இன்று மணியக்காரர் மந்திராலோசனைசபை கூடியிருக்கிறது. அங்கே நாராயண சாமி முதலியாருக்கருகில் கெட்டியப்பன் கம்பீரமாக வீற்றிருக்கிறான். வழக்கமாகப் பேசும் ஆசாரத்தில் இன்று கூடவில்லை. ஏனென்றால் வாசலில் நின்றாலும் பேச்சுச் சத்தம் கேட்கும். உட்கார்ந்திருப்பதும் வெளியில் தெரியும், ஆகையால் இரகசியமாக இருக்கட்டுமென உட்புற அறைக்குச் சென்றுவிட்டார்கள். பேச்சு ஆரம்ப மாயிற்று. "என்ன கேட்டீன? சங்கதி எப்படி இருக்குது? காரியம் சல்தியா நடக்காது போலிருக்குதே" என்றார் மணியக்காரர். "அதென்னங்கண்ணா அப்படிச் சொல்றீங்க? மமிட்டிப் புடியிலே ஒரு தட்டுத் தட்டினா காரியம் நடக்கிறாப்பலிருந்தா அதுக்குள்ளே கக்க வச்சிருக்கலாம், என்றான் கெட்டியப்பன். "ஆமா இதுதா உங்களுக்குத் தெரியும். நீங்க கக்க வைக்கவும் வாந்தி எடுக் கவும்தா செய்வீங்க, காரியத்திலே பின் என்ன சாதிப்பீங்க?" என்று சிரித்துக்கொண்டே முதலியார் பேச ஆரம்பித்தார்.

"அதுக்கு என்ன பண்ணித் தொலைக்கிறதுங்க? நா இன்னும் அந்தப் பக்கமே போகலயே?'

"இப்படிப் போகாத ஆளுக்கு இந்தவேலே எதற்கிணு கேளுங்க. இவுங்களை நம்பித்தானே நாம் இந்தக் காரியத்தில் இறங்கிருக்கோம். இல்லாட்டி எங்களுக்கென்ன இதில அக்கறை?" என்று நாராயணசாமி மணியக்காரரைப் பார்த்து கண்ணடித்துக்கொண்டே சொன்னார். முதலியார் இதைப் பல தடவை மணியக்காரரிடம் கூறியிருக்கிறார். "எதற்கும் நாம் தான் என்று காட்டிக்கொள்ளக்கூடாது. எவனோ ஒருவனை முன்னுக் குத் தள்ளிவிட்டு நாம் பின்னாலிருந்து வேலை செய்யவேண்டும். இதை

அப்படியப்படி என்று விடக்கூடாது என்று அநேகம் பல தடவை எடுத்துச் சொல்லிருக்கிறார்." "என்ன கெட்டியப்பா, தலயைச் சொரிகிறாய்? என்றார் மணியகாரர்."

"அண்ணா, அதுதா சொன்னனுங்களே. நான் போகலாம்னு தான் இருந்தே. அதுக்குள்ளே அவெ மாமியா வந்திருக்கிறா போவட்டும். அப்புறம் விசயம் தெரியாமலா போயிடும் என்று சும்மா இருந்திட்டே"

"செரி எப்படியும் நாளைக்குப் போயி தெரிஞ்சிக்கிட்டு வந்திடுங்க. அதறகப்புறம்தா யோசிக்கோணும். அதெத் தெரியாதுக்கு முன்னே பேசுவதில் பிரயோசனமில்லெ" என்றான் நாராயணசாமி.

"ஆமா அப்படித்தா செய்" என்றார் மணியக்காரர். இவர் நாராயணசாமியின் பேச்சுக்குப்பின் இப்படித்தான் சொல்வது வழக்கம்.

ஆனா நாகம்மா ஏதாச்சு கேட்டா, என்ன சொல்றது? மணியக்காரர் நாவசைப்பதற்குள் நாராயணசாமி "இங்கே கையோடு கூட்டீட்டு வர முடியாதா," என்று அவசரமாகக் கேட்டான்.

"கூட்டி வாறதா? இப்படி நொடிச்சா வரமாட்டாளா?" என்றான் கெட்டியப்பன்.

"அப்ப செரி" என்றான் நாராயணசாமி

"இங்கெதற்கு?" என்று கெட்டியப்பன் ஆரம்பிக்கையிலேயே "நான் சொல்றேன்" என்று இருமிக்கொண்டே ஒரு கிழவர் அங்கு வந்தார்.

## 17

திடும்பிரவேசமாக தங்கள் பேச்சுக்கிடையே ஒருவர் பிரவேசிக் கவே, இருவரும் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தனர். மணியக்காரர் முதலிலேயே பார்த்துக் கொண்டதால் ஆச்சரியப்படவில்லை. ஆனால் தானுண்டு கட்டி லுண்டு என்று படுத்திருப்பவர் ஏன் எழுந்து வந்தார் என்பதைப் பற்றியே அவர் ஆச்சரியப்பட்டார். அப்பெரியார் மணியக்காரரின் பெரியப்பா. தன் காலத்தில் அமக்களமான ஆட்ட பாட்டத்துடன் வாழ்ந்தவர் தான். இன்று எல்லாம் அடங்கி, ஒடுங்கி உட்கார்ந்துவிட்டார். வேளா

வேளைக்கு வீட்டிலுள்ள யாரோ ஒருவர் கிண்ணத்திற் சாதத்தைப் போட்டுவைத்து விடுவார்கள். அவர் உட்கார்ந்த இடத்திலே அதை வாயில் போட்டுக் கொண்டு அப்படியே படுத்துக் கொள்வார். கயிறுகள் அறுந்து தொங்கும் கட்டிலும், இரண்டு தலையணையும் ஒரு கிழிந்த துப்பட்டியுமே அவருடைய சொத்து. எதிர்பாராத விதமாக அவர் வந்து சேரவும் "ஏது உங்களுக்கும் பேச்சிலே ருசி உழுந்திட்டது போலிருக்குது. பக்கத்திலே வந்து இப்படிப் பாயிலே உட்காருங்க." என்று நாராயணசாமி சொன்னான்.

"இல்லப்பா இப்படியே இருக்கட்டும். எங்கிருந்தா என்ன? எல்லா ஒண்ணுதானே! என்னவோ கெட்டியப்பெ சொன்னானே?" என்றார் கிழவர்.

"ஏனுங்க மாமா, நீங்க சொல்றதா வந்தீங்களே! அப்புறம் எங்களைக் கேக்கறீங்களே? என்றான் கெட்டியப்பன்.

'ஆமா நாந்தா சொல்ல வந்தே எம் வார்த்தைய கேட்டாக் கேளுங்க கேக்காட்டிப் போங்க. ஆனா பாக்குக் கடிக்கிற நாழி உட்காந்தா அதுவே போதும்" என்றார்.

"நாங்க என்ன ஓட்டத்திலா நிக்குறோம் தாராளமாகச் சொல்லுங்க. அவசரமொண்ணுமில்லே" என்று முதலியார் கூறவும் பெரியவர் தொடங்கினார்.

"கெட்டியப்பா பூனையாட்டம் படுத்திருந்தாலும் என்னென்ன நடக்குதுங்கிறது தெரியாமே போகலெ. நாங் கேட்டுக்கிட்டுதா வர்றே. உங்க பேச்சு அப்படியெ காத்திலே கசம்பிலே விழாமப் போகலெ. ஆனா இந்தக் கொட்டு முழக்கெல்லா என்ன ஆகுமின்னு யோசிக்சுப் பாருங்கடா! கெட்டீப்பா இப்படீ முன்னுக்கு வந்து உட்காரு. எனக்குக் கிட்டத்திலே வா. இன்னும் பக்கத்திலெ வந்து உட்காரு. சும்மா சிரிக்காதே பேசாமெ வா இப்படி".

மணியக்காரருக்கு இது வேடிக்கையாக இருந்தது. மாமனுக்கு என்னவோ பல்லுப் பரபரப்பு, பேச வந்திட்டார் என்று கெட்டியப்பன் நினைத்துக் கொண்டான். நாராயணசாமிக்கு அவருடைய பூர்வாசிரம வாழ்க்கையெல்லாம் தெரியும். இப்போது வேதாந்தம் பேச வந்துட்டார்!

எல்லாம் தொலைக்கிறதுக்கு முன் இந்த ஞானோதயம் உண்டாக வில்லையாக்கும் என எண்ணி குறும்பாகச் சிரித்துக் கொண்டு, 'சொன்னாக் கேளுங்க பெரியவங்க சொல்லத் தட்டலாமா? முன்னுக்குப் போங்க" என்று கெட்டியப்பனுக்கு ஒதுக்கி வழிவிட்டான்.

பெரியவரும் புன்னகையுடன், "அடே கெட்டீப்பா உம் மண்டெலெ என்னடா இருக்குது? நீ மாமா மச்சானா இருந்தாலும் எம் புள்ளெ மாதிரி அடெபுடா என்றா கொவிச்சுக்குவாயா என்னப்பா? என்று மென்று விழுங்கினார்.

"இல்லிங்க மாமா, இல்லிங்க மாமா, நீங்க சொல்லுங்க" என்று கெட்டியப்பன் நகர்ந்து உட்கார்ந்தான்.

பெரியவருக்குச் சற்று உற்சாகம் அதிகரித்தது. ஒருதரம் கனைத் துக் கொண்டு "கேளடா ராஜா மலெ போலெ மண்டிக்கெடந்த கள்ளி களெல்லா மாயமா மறஞ்சது பார்த்தாயா? நாம எத்தனெ நாள்கத்தியிலும், அரிவாளிலும், வெட்டித்தள்ளியும், வெட்ட வெட்டக் கொழுத்தது! எப்படிப் பூண்டற்றுப் போச்சு பார்த்தாயா? கள்ளியே நாசம் பண்ணின வெள்ளப் பூச்சியெ பார்த்திருப்பாய். அது கடுகாட்ட சின்னஞ்சிறு சாத்தானே இருந்தது. நம்முடைய கத்தியு. கவையு, முடிக்கமுடியாத வேலெயே வெகு சுளவிலெ பூச்சி முடிச்சுட்டது. என்ன கெட்டீப்பா இண்ணக்கு ஒரு ஆனையைக் கூட தூக்கியடிக்கலாமுனு உனக்குத் தோணுது. மீசைய முறுக்கி உடறாய்! கையெக்காலெத் தட்டறாய். வாய்ப்பேச்சு வாயிலிருக்க கை வைக்க 'ஆரம்பிக்கிறாய். ஆனால் இந்த நல்ல ரத்தம் நொடியிலே மறஞ்சுடுமப்பா! ஒரு பூச்சி வேண்டா புழு வேண்டா. சும்மா இருக்க மாயமா போயிடும்." வயோதிகர் சற்றுப் பேச்சை நிறுத்தினார். அவருடைய உணர்ச்சிகள் மேலுக்குமேல் பொங்கி வருவது தேகத்து நரம்புகள் புடைப்பதிலிருந்தே நன்றாகத் தெரிந்தது. அருகிலிருப்பவர்கள் வாய் திறக்கவில்லை. கிழவனார் தொடர்ந்து பேசினார்.

"கெட்டீப்பா, உனக்கு மாத்திரமில்லே எல்லோருக்கும் தா சொல்றே. ஏண்டா, கெட்டுப் போகிறோம், உண்டு உடுத்தியா கெடறோம்? சீர் சிறப்பிலா நாசம் செய்றோம்? இன்னொருத்தனுக்கு ஒவகாரம் செய்தா கெட்டுப் போகிறோம்! இதெல்லா கொஞ்சம் யோசிச்சுப்பாரு"

"அடே அப்பா, ஊருக்கு மேக்காலெ இட்டேறி எப்படி அசங்கியமா ஆபாசமா இருக்குது பாத்தயா? அதுவும் இந்த மழை காலத்திலெ எல்லா ஒரே துர்நாத்தம் மூக்கைப் பிச்சுக்கிட்டு போறமாதிரி வீசுலே! அதெ சுத்தம் பண்ண ஒரு புள்ளெ பொறக்கலயே! இன்னுங் கேளு ஊர்ச்சாவடி கட்டிடம் கல்லுக பேந்து ஆட்டம் கொடுத்துட்டுதே! அத எடுத்துக் கட்ட எவனாச்சும் முன்னுக்கு வர்றானா. இல்லே இல்லே, பின்ன என்ன? எல்லா ஒரே கோளு, குண்டுணி கச்சிதான்.

"இந்தக் கச்சியிலதாண்டா நம்பவங்க அழிஞ்சு போனது. கச்சேரிக் கும் ஊட்டுக்கும், ஊட்டுக்கும் கச்சேரிக்கும் நடந்துக்கிட்டிருந்தா காட்டுச் சங்கதி என்ன ஆகுமினு பாருங்கடா! இதிலே 'ரோட்டல்' சோத்துக்கு பொய் சாச்சி சொல்லப் போறவங்க எத்தனைபேர்! நானும் எத்தனையோ பட்டு மாஞ்சிருக்கிறே. அடடா என்ன பாவம்! ரோட்டல் சாப்பாட்டை எண்ணிப் பொய்ச் சொல்றதா? அட உங்களுக்கு ஏழேழு சென்மங்களுக் குத்தா சொர்க்கம் கிடைக்குமா?

அவர் மகா வருத்தத்துடனும், ஆத்திரத்துடனும் பேச்சை நிறுத்தினார். "என்னங்க மாமா இனி ஒண்ணும் பாக்கி இல்லீங்களா' என்றான் கெட்டியப்பன், மற்றிருவரும் தாங்காது சிரித்து விட்டனர்.

பெரியவர் முன்னிலும் சாந்தமாகவே உட்கார்ந்திருந்தார். வந்த ஆத்திரம் ஏனோ அடங்கிவிட்டது. அவர் என்னவோ சொல்ல வாயெடுத்தார். அதற்குள் கெட்டியப்பன். "ஏனுங்க மாமா இத்தென விஷயத்தை வெச்சுக்கிட்டா இவ்வளவு நாளும் பேசாதிருந்தீங்க? என்றான்.

"அட போடா, பதரே, செவிடங் காதில சங்கூதின மாதிரி, உங்கிட்டே நீதி ஓதி என்ன புண்ணியம்? சும்மா படுத்திருந்தாலும் களைப்புக் காணாது" என்றார் சலிப்போடு.

"அதுதானங்க உங்களுக்கு நல்லது" என்றான் நாராயணசாமி. 'உம்' முதலி லேசுப்பட்டவனா! எந்த முண்டச்சியோ தண்டுவனோடு கெட்டுப் போறதுக்கு பெரிய குடும்பத்தைத் தெருப்பண்ணறதுக்கு யோசனெ சொல்லப்பா, சொல்லு" என்று பெரியவர் முடிக்கு முன்னே,

“நீங்க விசயம் தெரியாமெ பேசறீங்க’ என்று நாராயணசாமி சற்று அழுத்தமாகவே சொன்னான்.

மணியக்காரரும் ‘ஆமாங்க நீங்க போய் படுத்துக் கொள்ளுங்க’ என்றார்.

அதே சமயம் காலடிச் சத்தம் கேட்கவும் மூவரும் திரும்பிப் பார்த்தனர். வெகு வேகமாக அங்கு வந்த செங்காளி ‘காளியம்மா ஊருக்குப் போன சமாசாரம் தெரியுமா? அவனோடு சின்னப்பனும் போயிருக்கிறான்’’ என்றான்.

“அப்படியானால் நல்ல வேட்டைதான். நான் நாகம்மாளைக் கண்டு வாரேன்’’ என்று கெட்டியப்பன் ஒரு குதியோடு போனான்.

சரி நாம் தோட்டப்பக்கம் போவோம்’’ என்று நாராயணசாமியுடன் மணியக்காரர் எழுந்தார்.

## 18

சிவியார் பாளையத்தில் மற்றெந்தப் பாகத்தையும் விட, கிழக்குப் பாகத்தில்தான் அழகு மலர் சொரிந்து நிற்கிறது. பிஞ்சு, பூவோடு குலுங்கும் பச்சை மரம் போலும், நுரை அலையோடு கூடிய நிறை நதி போன்றும் அங்குதான் குளிர்ச்சி செழித்திருக்கிறது. குடை பிடித்தாற் போல குவிந்திருக்கும் கருவேல மரங்களும் , மலர் குலுங்கும் ஊஞ்ச மரங்களும் பூச்சொரிந்து வேலியைச் சுற்றியிருக்கும் கொடி வரிசைகளும் ஓயாது மணங்கலந்து வீசும் ரஞ்சிதத் தென்றலும் சேர்ந்து அப்பிரதேசத் திற்கு அத்தனை வனப்பை அளித்திருந்தது. வழிநெடுக மெதுமணல் அடி எடுத்து வைக்க ஓசை கேட்காது. அவ்வழி நடக்கையில், பாதத்திற்கு மட்டுமல்ல மனத்திற்கு ஒரு உற்சாசம் பிறக்கும். சுற்றிலும் இருக்கும் அச்சுகச் சூழலில் நாம் நம்மையே மறந்து விடுவோம்.

இப்போது அந்த வழியாகத் தான் மணியக்காரரும், நாராயண சாமியும் களத்துக் காட்டிற்குப் போய்க்கொண்டிருந்தார்கள். அவர்கள் சுவாரஸ்யமாகப் பேசிக்கொண்டு போனார்களே ஒழிய இக்காட்சிகளைக்

கண்டு களிக்கவில்லை. ஒரு வேளை தினம் பார்ப்பதால் சலிப்பு ஏற்பட்டுவிட்டதாக்கும்.

நாராயணசாமி உறுதியான குரலில், "சீக்கரமா முடிவு கட்டீ டோணும் நீங்க சும்மா அப்பிடியே அவளிடம் அசைச்சு வையுங்க. அந்தப் பூமி நம்மெ உட்டு எங்கே போயிடும்? நம்ம களத்துக் காட் டோரம் இருக்குது. பக்கத்து எனம். எனத்தோடேயே சேந்துடட்டும். நா எல்லா வழி செய்து விடறே அவெ எங்கெ நம்மெ உட்டு பறந்திடப் போறாள்? என்றான்.

"ஆமாப்பா, அதெ எப்படியாச்சு வாங்கினாத்தா புல்லுக்குப் பஞ்சமிருக்காது. மாடு கண்ணுகளெ கொரையிலே கட்டிடலாம். தீவனத்துக்கு அடித்தட்டறபோது வண்டியெக் கட்டிக்கிட்டுப் போகவேண்டிய தில்லெ."

"அப்படித்தா செய்யணும், வசப்பட்டா ஒட்டனக் கூப்பிட்டு வெட்டுக்கூட உட்டுப் பாக்கோணும்" என்றான் நாராயணசாமி.

"கெணத்துச் சமாச்சார எல்லா நெலத்தே வாங்கறதுக்கு முந்தியேவா? இது தானப்பா எருமெ வாங்கி கட்டினகதே" என்று மணியக்காரர் சொல்லிச் சிரித்தார்.

"நல்லாச் சொன்னீங்க" என்று கூடச் சேர்ந்து கை தட்டிக்கொண்டே சிரித்தான் நாராயணசாமி.

மணியக்காரர் உற்சாகமாக "என்ன நாராயணா எல்லாஞ் சரிதா, நாகம்மா பக்க நாமெல்லா நிண்ணு கடைசியிலே ஒண்ணும் எடுபடாது போனா என்ன செய்யறது? அவமானமாவல்லா போயிடும்? என்றார் "ஒருக்காலும் போகாது நம்மை மீறி அப்படிப் போயிடுமா?.

"போகாதுன்னா கையிலே புடிச்சு நிறுத்துற விஷயமா? சின்னப்பன் கோர்ட்டு வரையிலும் பாக்கிறதா இருந்தா? செபம் சாயுமா? என்றார் மணியக்காரர்.

"சின்னப்பனாவது கோர்ட்டுக்குப் போறதாவது. கனாவில் கூட நெனக்க மாட்டா! பத்துப் பேரு பாத்து நாம் செல்றதுதா சட்டம். இதுக்கு அப்பீலே கெடையாது."

"அப்படிச் சொல்லலாமா".

"ஏங் கூடாது. என்னதாஞ் செய்வான்? சொல்லுங்க அப்படி வித்திட்டு போறதானாலும் எவன் வாங்க வாருவா? எங்கே விரல் விடுங்க பார்க்கலாம் என்று அபாரக் கோபம் வந்தவன்போல் கேட்டான்."

'உம் பாப்போம்" என்று கூறிவிட்டு "அதோ அங்க பாரப்பா. ஆரு நம்ம ராமசாமியா எதிரில் வாரது?" என்று கை நீட்டிக் காட்டினார்.

நாராயணசாமி பார்த்துவிட்டு "என்னமோ தெரியலே. ஆனா ராமசாமி யின் சாயல் இருக்குது. இருந்தாலும் கால் எடுத்து வைக்கிறதையும் தலையை அசைக்கிறதையும் பாருங்க. ராமசாமி இப்படியா நடப்பான்?" என்றான்.

இவர்கள் இப்படிப் பேசப்பேச அந்த மனிதரே அருகில் வந்துவிட்டார். அவரைக் கண்டவுடன் மணியக்காரர் மரியாதைக் கும்புடுடன் அமோகமாக வரவேற்றார்.

"அடடா எங்களே எல்லா மறந்திட்டீர்களா? ஏ உங்க ஊரையுட்டு அக்கட்டாலே வாறதில்லெ? இண்ணக்கி மழெ கட்டாயம் வரும்" என்றார்.

"என்னெக் கண்டா மழெ வந்தா நித்தம் உங்க ஊருக்கு வந்துவிட்டுப் போறெ! என்ன முதலியாரே. உங்க மணியகாரர் சொல்றதைப் பாத்தியா!" என்றார் வந்தவர்.

'எந்தப் புத்திலே எந்தப் பாம்பு இருக்குமோ? நீங்களுந்தா வந்து பாருங்களே! ஒருவேளை வெங்கமேட்டார் வந்தா மழையுந்தா வருமோ என்னமோ!" என்று நாராயணசாமி சொல்லவும் 'கடகட' வென அங்கே சிரிப்பொலி கிளம்பியது. அதற்குப் பின் கொஞ்சநேரம் பேசிக் கொண்டிருந்தனர். அப்புறம் ஏனப்பா நீங்க இத்தனபேர் இருந்தும் சின்னப்பெ

நெலத்தெ வெளியூரானுக்கு விக்க விடுவதா! நீங்க ஆராச்சு வாங்க ஜவேசு இல்லையா? என்று வெங்கட மேட்டுக்காரர் கேட்டார்.

“என்ன சொன்னீங்க?” என்று இருவரும் ஏக காலத்தில் கேட்டனர். இவர்களுடைய ஆச்சரியத்தையும் முகத்திற் பரவிய திகைப்பையும் கண்டு வெங்கமேட்டார் உங்களுக்கு அப்படியான இந்தப் பேச்சே எட்டலையா?” என்றார்.

முதலியார் விடாது, “யாரோ சொன்னாங்க. ஆனா அந்த ஆளுக்கு வாங்க மொதல் ஏதுண்ணு நெனச்சோம்” என்றான்.

“மொதல் ஏதா? என்னுங்க. நம்ம சரளைக்காட்டாரு மவெ குட்டியப்பெ கை இப்போ தணிவாவா பேசுதுங்க? இந்த வருசம் பருத்தி யிலேரண்டு பெரிய காகிதத்துக்கு மேலே அடிச்சுட்டானுங்களே!” என்றார்.

“அப்படியா? சரளைக் காட்டார் மவெ வாங்குறாங்கின்னு உங்ககிட்ட ஆரு சொன்னது?”

மணியக்காரரின் குழப்பத்தையும் கலக்கத்தையும் கண்ட முதலியார் கோபப் பார்வையுடன் கண்ணடித்துக் கொண்டே, “இப்படித்தா கேளாமாதிரி பேச்சு கிளம்பும். அப்புறம் அடங்கிப் போவும்” என்றார் எப்படி அப்பா? எங்கிட்டயே குட்டியப்பன் சொன்னான். இப்போ அவெ யோசிக்கிறதெல்லா பூமியெப் பத்திக்கூட அல்ல, சின்னப்பெ அண்ணன் ஊட்டுக்காரி குறுக்கே பூந்துகிட்டு விளாறு உடறாளாம். இதுக்குத்தா புடியாப் பேச்சுக் கொடுக்க மாட்டீங்கறான்”

இதைக் கண்ட இவர்கள் இருவரும் இன்னம்பூரா விபரங்களையும் கிரகிக்கலாமென, ‘ஊரிலே ஒரு ஏழை எளியவ இருந்தா இருப்பதா எங்காச்சும் ஓடீப் போறதா? உங்களுக்கே தெரியுமே. சின்னப்பெ ஆளோடு ஆளாக இருந்தவெ தானே? அவன் அண்ணந் தோணி கஷ்டப்பட்டு சம்பாரிச்சான். அவெ குடுத்து வைக்காம போயிட்டா. என்னமோ இருக்கற வரையிலும் ஒழுங்காயிருந்தா செத்தவனைப் பற்றி பேசி என்ன பயெ? இல்லெ, இதை எதுக்குச் சொல்ல வந்தேன்னா, அப்படிச் பொளச்சவெ

புள்ளயும் பொண்டாட்டியும் திண்டாடுட்டும்னு உட்டுட்டு எல்லாத்தெயும் சின்னப்பதானே சுருட்டீட்டு போவட்டும் என்கிறீங்க! அவ்வளவுதானே? என்றார் மணியக்காரர்.

வெங்கடமேட்டார் "அப்படியும் இந்த அக்ருமம் நமக்கு வேண்டாம். ஏதோ கால் அரை அவளுக்கும் ஒதுக்கிடச் சொல்லலாம்" என்றார்.

"இதென்ன தானம் கொடுக்கிற மாதிரி? அவ ஏ அப்படி வாங்கிக் கொள்றா? தன் புருஷன் சொத்தில் பாதி வந்தா வரட்டும். இல்லாட்டி வேண்டியதில்லைன்னு அவ சொல்லீட்டிருக்குறா!" என்றார் மணியகாரர்.

"வேண்டாம்னா அதெயும் எளந்திட்டுப் போவறதா. அவெ ஒரேடியா இல்லெ எங்கிறான்னு வச்சிக்குவோம்! சின்னப்பங் கிட்ட இவ எப்படி வாங்குவா?"

"அதென்ன நீங்க அப்படிச் சொல்றீங்க. எப்படியும் நாயம் இவளுக்கு இருக்கிறப்போ வாங்காமலா உடுவா? அதுக்கெல்லாந்தா நீங்க இருக்கரிங்களே," என்றார் மணியக்காரர்.

வெங்கடமேட்டார் "நாங்க இருந்து என்ன சாமி செய்யறது? இவளுக் குப் பங்கு பாகைச் சரியா கொடுக்க வேணுமிண்ணா கேட்டவங்க சிரிப் பாங்களே!" என்றார்.

மணியகாரர் சற்று வேகமாக, "நீங்க ஒரே பேச்சைத் திருப்பித் திருப்பிப் பேசுறீங்க கதெயெச் சொல்லி விடுவிச்சா கேக்க ஒத்துக்குவானா மாட்டானா? சின்னப்பெ குறுக்கே கெடந்ததுரும்பெ எடுத்தவனல் லவே..............."

"ஆமா ஆமா அதும் அப்படித்தா. எப்படியும் சின்னப்பெ போயிட்டா கச்சே, கிச்சே ஒண்ணும் இருக்காது என்று வெங்கமேட்டார் கூறி முடிப்பதற்குள் "இப்போது இருந்துதான் என்ன அரக்கீட்டான்?" என்றார் முதலியார்.

வெங்கமேட்டார் “அப்படியா? கட்சீன்னு பேருக்கு ஒருத்தெ இருந்தாக்கூட கட்சிதா, அவெ பங்காளிகளும் நாலுபேர் அவென உட்டுடு வாங்களா? என்னமோ அவெ மச்சின கெட்டிக்காரனா இருந்தா அவெ ஏம் போகிறான்? அது போகட்டும் இந்த கெட்டியப்பன் அங்கே கொஞ்ச எடவாடுங்கிறாங்களே1 கடைசிலே பொம்பள முண்டே பேரெக் கெடுத் திட்டா! இந்த எளவு அசிங்கியமல்ல? என்றார்.

“நீங்களே இப்படி ஆரம்பிச்சிட்டா அப்புறம் ஆரென்ன சொல்லி இருக்குது. நாகம்மா சங்கதி உங்களுக்குத் தெரியாதா? இத்தென வருஷமா இல்லாமே இனியா அவ அப்படித் திரியப்போறா? சே, சே என்னத்தைச் சொல்றது போங்க” என்றார் மணியக்காரர்.

“ஆமாமா, அந்த மசப்புள்ளே அப்படியெல்லாம் போகமாட்டா. சரி, சரி, எல்லாம் பார்ப்போம் இண்ணக்கி சாவகாசமாப் பேச முடியலெ இன்னொரு நாளக்கி வர்றே,” என்றார் வெங்கமேட்டார்.

“எங்களுக்கும் நேரமில்லை அடடா பொழுதே போயிட்டதே!” “சரி போய்வாங்க” என்று இருவரும் மேலே நடந்தார்கள்.

## 19

சின்னப்பன் ஊரிலிருந்து வந்துவிட்டான். ஆனால், தான் போய்வந்த விபரத்தையும் மைத்துனன் உடல் நிலையைப் பற்றியும் இரண்டே வார்த்தையில் சுருக்கமாகக் கூறினான். வேறு அதிகப்படியாக ஒன்றுமே சொல்லவில்லை. அவன் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்த ராமாயி எப்படியோ ஏதோவெனக் கலங்கினாள். ஆள் சோபையற்றிருப் பதையும், முகம் கருகிவழிந்து, கண் உள்ளே போய் கவனமில்லாதிருப் பதையும் கண்ட அவள், ஏதாவது தன்னிடம் சொல்ல அஞ்சி மறைக் கிறானோ என்றுகூட நினைத்தாள்.

இரவு படுக்கைக்குப் போகு முன்பு கணவனிடம் “எப்படியிருக்குது? தேவலாமா?” என்றாள். இதே கேள்வியை இதற்கு முன் அவனிடம் எண்ணற்ற முறை கேட்டிருக்கிறாள். ஆனாலும் அவள் மனம் என்னவோ சஞ்சலித்துக் கொண்டேயிருந்தது.

“இல்லெ அப்படியே தா இருக்குது.”

“அப்படினா இன்னம் நோக்காடு நீங்கலயா? எப்படித்தா இருக்குது? நல்லாச் சொல்லுங்கோ, கட்டிலே உட்டு எழுந்திரிக்க முடியலையா? சோறு தண்ணி குடிக்கிறானா என்ன?”

“அதெல்லாம் எப்போதும்போல உங்கறான். ஆனால் நரம்புதா அடிக்கடி பளீர் பளீர்னு தொந்தரவு குடுக்குது. படுத்தாலும் உக்காந்தாலும் பொறுக்க முடியலீங்கறான்” என்று சின்னப்பன் சொன்னான்.

ராமாயிக்கு வருத்தம் தாங்கமுடியவில்லை சகோதர வாஞ்சையில் அவள் உள்ளம் பொருமிக் கொண்டிருந்தது. எங்கோ தூரத்தில் நெளித்து புரண்டு அவஸ்தைப்படுகிற அவள் தமையனுடைய சங்கடத்தைக் கற்பனை பண்ணி வேதனை அடைந்தாள். அவள் கண்களில் கண்ணீர் திரண்டது.

விம்மலுடன் “இப்போ ஏதாச்சும் பண்டிதம் பாக்கிறாங்களா? எப்படித்தா இருக்குது?” என்று கேட்டாள். சின்னப்பனுக்கு இக் கேள்விக்கு என்ன பதில் சொல்லுவதென்றே தெரியவில்லை. ஓயாது எப்படி இருக்கிறான் என்றால் எதைச் சொல்வது? ஒண்ணும் செய்யாது’ என்று மட்டும் சொன்னான். அதே சமயம் ‘கடிகடீரென்று’ தலைக்குமேல் கூரையிலிருந்து பல்லி சொல்லிற்று. இருவர் மனத்திலும் சுருக்கென்றது. ஏனெனில் அந்த இடத்திலிருந்து சொல்லும் பல்லி மகாகெட்டது என்று சொல்லுவதுண்டு.

‘ஐயோ! நச்சுக் கெரகம் சொல்லுதெ’ என்றாள் ராமாயி.

சின்னப்பன் ‘உச்சத்தில் சொன்னா அச்சமில்லெ நல்லதுதா’ என்றான் சற்றுத் திடமாக.

அவளுக்கு உடனே போய்த்தான் பார்த்துவிட்டு வந்திடலாமே என்ற ஆவல். ஆனால் தலைக்குமேல் காத்திருக்கும் வேலையெல்லாம் தான் அவளுக்குத் தெரியுமே. பருத்தி எடுத்து முடிப்பதற்குள் கம்மங்காடு

விதைப்பு வந்துவிடும். இந்த ஒரு வாரமாக சின்னப்பன் இல்லாததினால் எவ்வளவோ காரியங்கள் தடைப்பட்டுப் போய்விட்டன. அடுத்தடுத்து இப்படி ஊர்ப்பயணம் போனால் குடுப்பம் முன்னுக்கு வந்த மாதிரித்தான்! எந்தக் குடியானிச்சிதான் இதற்குத் சம்மதிப்பாள்? இதையெல்லாம் யோசித்தே அவள் தன் கணவனிடம் வாய் திறக்கவில்லை. காலையில் சின்னப்பன் தோட்டத்துக்குப் போனான். எதிரில், குறுக்கே அங்கே, இங்கே காண்பவர்களெல்லாம் அடே! எங்கே சின்னப்பா பத்து நாளாகக் காணோம்? உம் மச்சினனுக்குத் தேவிலையா? அது என்ன? நரம்புச் சுளுக்குத் தானே? நம்ம சிக்கரிச்சி பாளையம் வண்ணான் மந்திரிப்பதில் சூரனாச்சே, கூட்டிவந்து காட்டினீங்களா? என்று தங்கள் அனுதாபத்தையும் பரிகாரத்தையும் பல விதமாகத் தெரிவித்தார்கள். சின்னப்பன் எல்லா வற்றிற்கும் அப்படியப்படியே பதில் சொல்வதற்குள் அவனுக்குப் போதும் போதும் என்றாகிவிட்டது. அவர்கள், எல்லோரையும் விட ராமமூப்பன்தான் 'வாட்டி வளவெடுத்து' விட்டான் நரப்புச் சுளுக்காம்! இதுக்குப் படுத்துக் கொள்றதாம். கொஞ்சம் விளக்கெண்ணெய் போட்டுத் தேச்சா ஓடிப்போகும். இல்லாட்டி வாய்க்காலில் திடுதிடுன்னு தண்ணி உளறப்போ உக்காந்து வலிக்கிற எடத்தைக் காட்டினா பறந்திடும். அப்படியும் தீரலீன்னா ஆத்தா பேரைச்சொல்லி பிடிசாம்பலெ போட்டுட்டு ஒரு மஞ்சத் துணியெ எடுத்து காணிக்கே முடிஞ்சு வச்சிட்டு மேலக்கி ஒரு ஆடு வெட்டினா போகுது. 'இதுதான் எல்லாந் தெரிஞ்சவங்களுக்கு கொஞ்சம் தெரியாது என்று சொல்லுவாங்க." என்று தன் மேதாவிலாசம் முழுதும் காட்டிவிட்டான். சின்னப்பனுக்கு 'ஆமாம் ஆமாம்' என்று சொல்வதைத் தவிர வேறு வழியில்லாது போயிற்று.

ராமாயியிடமும் இப்படித்தான் சகலரும் விசாரித்த வண்ணம் இருந்தனர். பருத்திக் காட்டுக்குள் "என்ன ராமாயி, அண்ணனுக்கு எப்படி இருக்கிறது?" என்பாள் ஒருத்தி. மற்றவள் 'ஐயோ பாவம்! இந்த அக்காளுக்கு இப்படி மிசிற நேரம் இல்லாமே இருக்குதே! இல்லாதே போனா இங்கே நிப்பாளா? இப்பவும் உசிரு அங்கயும் கட்ட இங்கயுமாத்தா இருக்கிறதா" என்பாள்.

வேறொரு பெண் குனிந்த தலை நிமிராமலே அதுவும் பொல்லாத நோக்காடுதானம்மா, "எங்க ஐயனுக்கு அதுதானெ எமனாக முடிஞ்சது,

என்பாள். கொஞ்சம் இளகிய மனதுடையவள், "என்ன பண்ணிப்போடும்?" நீ ஆருக்குச் சூதுவாதுசெய்ய நெனச்சிருக்கிறாய், மலெபோல வந்தாலும் பனிபோல் நீங்கிவிடும். ராமாயி ஆரு என்ன சொன்னாலும் நீ காதிலெ போட்டுக் காதெ" என்று ஆறுதல் கூறினாள்.

இவ்வித ஆறுதலும் அனுதாபமும் கிடைத்தாலும் அவள் மனது சாந்தமுடையவில்லை என்று நல்ல சேதி வரும் என்ற ஏக்கத்தில் இருந்தாள்.

ஒருநாள் காலை ராமாயி வீட்டு வேலைகளை மும்முரமாகக் கவனித்துக் கொண்டிருந்தாள். வாசலில் பாத்திரங்களெல்லாம் துலக்கு வதற்கு எடுத்து வைக்கப்பட்டிருந்தது. அருகிருந்த கூரைமேல் ஒரு காகம் வந்து உட்கார்ந்து கத்தியது. அந்தச் சத்தத்தைக் கேட்ட ராமாயியின் முகம் மலர்ந்தது. "இண்ணைக்கி ஊரிலிருந்து யாராச்சும் வருவாங்க" என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டாள். ஆனால் சற்று நேரத்தில் ஏழெட்டுக் காகங்கள் எங்கிருந்தோ வந்து கத்தவே அவள் கையைப் பலமாகத் தட்டினாள். காகங்கள் போவதாகக் காணோம். பறப்பதும் உட்காருவதுமாகவே கத்திக் கொண்டிருந்தன.

"இதென்னடா எழவாயிருக்குதே' என்று சின்னப்பன் அங்கு வந்து ஒரு கோலை எடுத்து வீசினான். காக்கைக் கூட்டம் கண்காணாது பறந்தது.

ராமாயி காரணமற்ற பயத்துடன் "காக்கை கத்தினா ஒன்றும் கெட்டதில்லையே" என்றாள். சின்னப்பன் வாராது வழியிலா தங்கிடும்? என்றான்.

## 20

துக்கமும் சுகமும் மாறிமாறி வருவது தானே! துக்கம் வந்தால் சோர்வடைவதும், சுகம் வந்தால் களிப்படைவதும் சான்றோர் செய்கை யாகுமா? இந்தத் தத்துவத்தை உணர்ந்தவள் போலத்தான் நாகம்மாள் குடும்பத்தில் எவ்வித பேச்சும் வைத்துக் கொள்ளவில்லை. அதனால் 'ஓடு மீன் ஓடி உறுமீன் வருமளவும் வாடியிருக்கும் கொக்கைப் போல"

தன் காரியத்தில் கண்ணாயிருந்தாள். அடைபட்ட சிங்கம் அறுத்துக் கொண்டு போகும் வேகத்தில் அவர்களிடமிருந்து பிரிந்து செல்ல ஆயத்தம் செய்துகொண்டிருந்தாள்.

முன்பொருநாள் அந்தி வேளையில் அவள் கெட்டியப்பனைச் சந்தித்த அதே குடிசையில் இன்று நாகம்மாளைக் காண்கிறோம். ஆனால் முன்னதிற்கும், இப்போதைக்கும் எவ்வளவோ வித்தியாசம். மனிதர்கள் தான் மாறுகிறார்கள் என்றால் குடிசையுமல்லவா மாறிக்கொண்டிருக்கிறது! அச் சின்னச்சிறு குடிசையும் ஏனோ வேண்டா வெறுப்பாகத் தன்மீது போர்த்திபிருந்த தென்னங் கீற்றுகளைத் தூக்கி எறிந்து விட்டது. என்ன கோபமோ! இரண்டொரு சட்டங்களும் பெயர்ந்து போகட்டுமா, நிற்கட்டுமா என்று கேட்பதைப்போல் ஓரங்களில் தொங்கிக் கொண்டிருக் கின்றன. அதோடு குடிசையைக் கபளீகரம் செய்யக்கிளம்புவதே போன்று சுற்றிலும் செடிகள் அடர்த்தியாக வளர்ந்திருந்தன. முன்பு துளி வெளிச்சத் தையும் புகவிடாது தடுத்த குடிசை இப்போது பால் நிலவைக் கொட்டிக் கொள்கிறது! ஒருவேளை சந்திர வெளிச்சத்தின்மேல் ஏற்பட்ட மோக மாயிருக்கலாம்.

கெட்டியப்பன் ஏதோ பிரதமாதமாக யோசித்துக் கொண்டிருந்தான். என்ன! இவன் கூடவா விஷயங்களை இங்ஙனம் ஆழ்ந்து சிந்திக்கிறான்? என்று ஆச்சரியம் எழலாம். ஆம் நல்லதோ கெட்டதோ எதற்கும் யோசனை வேண்டித்தானே இருக்கிறது?

நாகம்மாள் அவனுக்கு எதிரில் சற்றுத் தள்ளி குடிசை வாயிலைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள். வெகு தூரத்துக்கப்பால், வேலிக் கொடியும் அதற்குப் பின்னும் அவள் கண்களுக்குத் தெரிந்தன. எங்கும் வெண்காந்தி உள்ளத்தை அள்ளிக்கொள்ளும் வண்ணம் குளிர்ச்சியுடன் படர்ந்து கிடந்தது.

“என்ன சும்மாவே இருக்கிறாய்!” உனக்காக நா எல்லா செய்து தயாரா வச்சிருக்கறே! என்றான் கெட்டியப்பன்.

நாகம்மாள் எங்கோ பார்த்துக் கொண்டே, "அப்படி என்ன பண்ணீட்டே, சின்னப்பெ என்னைக் கூப்பிட்டு ஒண்ணும் கேட்கலையே" என்றாள். நீ இப்படியிருந்தால் கேட்காதது மட்டுமா? சொல்லாமலே போயிடமாட்டானா? என்றான் கெட்டியப்பன்.

"எங்கே?"

"எங்கேயா?"

"பின்னெ சொன்னால்ல தெரியும். எங்கே அந்தச் சனியன் பிடிச்சவ ஊருக்கா" என்று சற்று ஆத்திரத்துடன் கேட்டாள்.

"பின் வேறெ எங்கே?"

நாகம்மாள் பெருமூச்சுடன் "சரிதான் நிச்சயமாயிட்டதா எல்லா? ஊருக்குத் தெரியாதே!" என்றாள்.

"உனக்கு எதுதான் தெரிஞ்சு இருக்கு? இனி கிணத்திலே போட்ட கல்லுமாதிரி சும்மா இருந்து சுகமில்லெ. உடனே இரண்டிலே ஒண்ணு சொல்லச் சொல்லு" என்றான் கெட்டியப்பன்,

நாகம்மாள் என்னவோ ஞாபகப்படுத்திக் கொள்ள முயலுகிறவள் மாதிரி தலையைக் குனிந்து கொண்டு ஆலோசித்தாள்.

கெட்டியப்பன் கைநெட்டை எடுத்துக் கொண்டே "நீ என்ன பண்ணலாமுன்னு இருக்கிறாய்? கள்ளம் போன மூணா நாள் கதவை இழுத்துச் சாத்திப் பிரயோசனமென்ன?" என்றான்.

"சரி நா கட்டாயம் கேக்கிறே ஆமா என்ன சொல்லுவாங்க? நா சொல்றதைக் காதிலே போட்டுக்குவாங்களா மாட்டாங்களா?"

"இதென்ன இது? கொழுந்தை பொறக்கிறதுக்கு முன்னாலே பெண்ணா ஆணான்னு கேக்கிறதப் போலிருக்குதே! நீ கேளு, சரியா, ஒத்துவந்தாச் செரி, இல்லாத போனா ஊர் கூடி நாயம் போடலாம்.

பத்துப்பேர் முன்னாலே வந்து சொல்லட்டும். இதை எல்லா மணியக்காரர் ஊட்டில் பேசியிருக்கிறோம். நீ ஒண்ணப்பத்தியும் அஞ்சாதே .என்ன வந்தாலும் மணியக்காரர் தாக்காட்டுவார். நீ சும்மாயிரு. சின்னப்பெ எப்படி இல்லீன்னு கையை விரிப்பானோ பார்ப்போம்.

“இதில் இன்னொரு பாவி வந்து குறுக்கே நிக்கிறாளே! அந்த எமன் இல்லாது போனாப் பரவாயில்லை. சாமி வரங் கொடுத்தாலும் பூசாரிக்கு மன்ம்வராதே” என்றாள் நாகம்மா.

கெட்டியப்பன் கொஞ்சம் எக்களிப்பாக “அவதா தொலைஞ் சிட்டாளே. அவ மகனை எடுத்து நடு ஊட்டிலே போட்டிருக்கிறபோது நிப்பாளா?” என்றான். நாகம்மாள் மனத்தில் இந்த வார்த்தைகள் சுருக்கெனத் தைத்தது. முகத்தைச் சுளித்துக் கொண்டு “சும்மா ஏ சத்தம் போடறெ? ஆராச்சும் இந்தப்பக்கம் வரப்போறாங்க” என்றாள்.

“இங்கே எவெ வருவா? நீ ஏ அப்படி பயந்து சாவரே”

நாகம்மாள் எழுந்தாள். அவள் எழுந்து விட்டாள் என்றால் மின்னல் வேகத்தில் மறைந்து விடுவாள். “சரி நா வோவட்டுமா?” என்று அவள் கேட்குமுன்பு சடக்கெனக் கெட்டியப்பன் கை உயர்ந்தது! ஆனால் யாது காரணத்தாலோ அப்படியே கையை பின்னுக்கு இழுத்துக் கொண்டான்.

நாகம்மாள் “அதோ? வேலிக்கு மேலே நெலா வந்திட்டுது கெழக்காலக்காட்டெ சுத்திப்பார்த்து வர நேரமாச்சுன்னுதா சொல்லோணும் என்று கூறிவிட்டு திரும்பிப் பாராமல் நடந்தாள். கெட்டியப்பன் குடிசைக்கு முன்னால் அவள் போவதைப் பார்த்தபடியே நின்றுகொண்டிருந்தான். செடி, கொடி, மரம், மட்டை, வானம், பூமி சகலமும் நிலவில் குளித்துக் கொண்டிருந்தன. சுற்றிலும் ஒரே நிலாக்காடு. அந்த மனோகரமான மயக்கத்தைத் தாங்கமாட்டாது தானோ என்னவோ கெட்டியப்பன் கீழே கிடந்த தென்னந் தடுக்கின் மேல் தலை சாய்த்தான்.

நாகம்மாள் வீட்டு வாசற்படியில் அடியெடுத்து வைத்தாளோ இல்லை யோ ‘ஆர் அது’ என்று கோபத்துடன் சின்னப்பன் கேட்டான்.

ஏ? என்றபடியே மேலே நடந்தாள். சின்னப்பன் எழுந்து வந்து "எம் மானம் போவுதே" என்றான் சற்றுக் கடினமாக.

"மானமும் கீனமும் போறது ஏனோ? அப்படி ரோசக்காராயிருந்தா பிரிச்சு உடுங்களே" என்று நாகம்மாளும் அதே தொனியில் சொன்னாள்.

எதிர்பாராத இந்தப் பதிலால் திகைப்படைந்தாலும் சட்டென "உங்களே ஆரு கட்டிப்போட்டிருக்குறாங்க? நல்லாப்பிரிஞ்சு போகலாமே" என்றான் வேகமாக.

"எனக்கு உண்டான பங்கை ஒதுக்கீட்டா வெலகிக் கொள்றே. உங்களுக்கு வேணுமானா ஒரு கும்பிடு கூடப் போட்டுட்டு போயிடறே" என்றாள்.

சின்னப்பனுக்குக் கோபம் முன்னிலும் அதிகமாகப் பொங்கிக் கொண்டு வந்தது. இத்தனை நாளாக யார்யாரோ சொல்லியதைக் கூடக் காதில் போட்டுக் கொள்ளாமல் விட்டிருந்தான். இன்றுதான் தெரிந்தது. ஓஹோ, பங்கு வேணுமானா? செரி, 'எந்தக் காமாட்டிப்பயெ கேக்கச் சொன்னானோ அவனை வரச்சொல்" என்று உக்கிரமாக மொழிந்தான்.

நாகம்மாளும் 'கப்சிப்' என அடங்கிவிட்டாள். சின்னப்பனுக்குப் பங்கு கேட்டவள் பேரில் கூட அவ்வளவு கோபமில்லை. அவளைத் தூண்டி விட்டு வேடிக்கை பாக்கிறவர்கள் மேல் தான் அபார கோபம் வந்தது. பார்க்கலாமே சாமர்த்தியத்தை! எப்படித்தா வாங்கிடுவாங்களோ? என்று இன்னும் கண்டபடி வைதுகொண்டு அப்பால் சென்றுவிட்டான்.

## 21

திருடன் புகுந்த வீடு மாதிரி சாமான்கள் கண்டபடி ஒழுங்கின்றி, அலங்கோலமாகச் சிதறிக் கிடந்தன. படுக்கை, பாய் சுருட்டி வைக்கப் படவில்லை. புகையிலைக் காம்புகளும் பாய்க் கோரைகளும் காய்த் தொல்லிகளும் இன்னும் பல தினுசான தூசி தும்புகளும் பெருக்காததால் எங்கும் நிறைந்திருந்தன. எதற்கோ இறக்கிவைத்த பானை ஒன்று அடுக்கேறாமல் கீழே தனித்திருந்தது. அடுப்பு நிறையக் கிடந்த சாம்பல்

வழித்தெறிய வரும் ஆசாமி எங்கே என்று காத்திருந்தது. ஏன் இப்படி? தினம் இவ்விதம் வீடு இருந்தது கிடையாதே! இன்றுமட்டும் யாது காரணம் என்று கேட்டால், கடந்த இரவு நடந்த சம்பவத்தின் விளைவுதான் இவ்வளவும் என்று சொல்ல வேண்டும். ராமாயி என்னவோ கனாக் கண்டவள் போல உட்காந்திருந்தாள். விடிந்தது. தெரியும். தன்னுடைய கணவன் "பாலெ அடுப்பில வைச்சிருக்கிறே ஏதாவது பூனை கீனெ உருட்டிடப்போவுது" என்று சொன்னதும் தெரியும் ஆனாலும் என்ன? அவள் மனத்திற்கு ஒன்றும் தெரியவில்லை. முழுவதும் விளங்காத விடுகதையைப்போல் நெரடாக இருந்தது.

நாகம்மாள் கண் காது தெரியாமல் இழுத்துப் போர்த்துக்கொண்டு தூங்குகிறாள். தூங்கிறாளோ விழித்திருக்கிறாளோ! அடித்துப் போட்டமாதிரி அசையாது இருக்கிறாள். முத்தாயா 'அம்மா அம்மா' என்று கூப்பிடுவதும் ராத்திரி தின்ன மறந்த கருப்பட்டியை ருசி பார்ப்பதுமாய் இருந்தாள். சின்னப்பன் வழக்கப்படி வெகு நேரத்திலேயே படுக்கையை விட்டு எழுந்துவிட்டான். ஆனால் வெளியே செல்லவில்லை. காலையிலே எழுந்ததும் எழாததுமாய் வெளியில் வரும்போது 'பட்' என நெலவு அடித்தது 'அ' என்று அடிபட்ட இடத்தைக் தடவிக்கொண்டே என்ன துர்ச்சகுனமோ விடிந்ததும் விடியாததுமாய் என்ற கலவரத்துடன் பாலைக் கறந்துகொண்டு வந்தான். அன்று ஏனோ தோட்டத்துக்குப் போக அவனுக்கு மனமில்லை. ஆனால் சும்மா இருக்கவும் பிடிக்கவில்லை. ஒரு மாதமாக கட்டுத்தரைக்கு ஒரு முளை வேண்டியிருந்தது இன்று செய்து முடிப்போம் என்று ஒரு வேப்பங் கொப்பை எடுத்துச் செதுக்க ஆரம்பித்தான்.

சின்னப்பன் 'லொட் லொட்' என அரிவாளால் வெட்டும்போது சிறு சிறு மரத்துண்டுகள் தெறிக்கும் முத்தாயா அவைகளை ஒன்றுவிடாது பொறுக்கி விளையாட விறகு சேர்த்துக் கொண்டிருந்தாள். இதுதான் சாதம் செய்ய, இதுதான் குழம்பு செய்ய என்று முத்தாயா சொல்லும் போதெல்லாம் சின்னப்பன் மெதுவாகச் சிரிப்பான். சிலசமயம் துண்டுகள் விழாதபோது குழந்தை அருகில் வந்து "என்ன சின்னய்யா எனக்கு விறகு கொடுக்க மாட்டாயா? என்று கேட்டாள். அவனுக்கு அது ஒன்றும் காதில் விழாது. ஆயிரம் யோசனைகள் அவன் உள்ளத்தில் ஊசலாடிக்

கொண்டிருக்கையில் குழந்தையின் கேள்வி எங்கே பதியப்போகிறது? என்ன நாகம்மாளை பங்குப்பேச்சைக் கிளப்பியிருக்கிறாள்? இவளுக்கா இந்த யோசனை உதித்தது? இருக்காது! இவ்வளவு நாளாகத் தாய் போன்று ஒற்றுமையாகக் குடும்பத்தை நடத்தியவளா பிரிக்க முயல்கிறாள்? நல்ல தனம் திடீரென்று மறைந்து விடுவதும் உண்டோ என்று எண்ணுவான்.

நல்லதனமா? இப்பாதகி எப்போதும்தான் இப்படி மனதில் இப்படி விஷத்தை வைத்துக்கொண்டிருந்தாளோ என்னவோ! ஆனால் அடுத்த கணமே 'இல்லை' வெள்ளை மனத்தில் இப்போது யாரோ கரியைத் தடவி விட்டார்கள். ஆனால் அவன் யாராயிருந்தாலும் சரி, பிரமாவாயிருந் தாலும் பார்த்து விடுகிறேன் என்று தனக்குத் தானே கோபப்படுவான்.

பொழுது வேலிக்குமேல் வந்துவிட்டது வெயில் சுள்ளென்று அடித்தது. பந்தக் காலில் கட்டியிருந்த ஆட்டுக்குட்டி, ம்மா, ம்மா எனக்கத்தியது. அதைத் தொடர்ந்து எங்கோ ஒரு சேவல் 'படபட' வென இறக்கையை அடித்துக்கொண்டு 'ஏண்டா யாரடா வேலியோரம் ஆட்டை உட்டது?'' என்று ஒரு பெண்குரலும் ஓங்கி எழுந்தது. சின்னப்பன் குடலறுந்தவன் போலக் காரணமின்றித் திடுக்கிட்டுப் பின்னும் தன் காரியத்தைக் தொடங்கினான். ராமாயி அவன் அருகில் வந்து நின்றாள்.

"ஏதாவது வேலை இருந்தா போய் பாக்கிறதுதானே? ஏ இப்படி பனைமரம் மாதிரி நிண்ணுகிட்டிருக்கிறாய்?'' என்றாள். ராமாயி சுற்றிலும் பார்த்துவிட்டு உள்ளே போனாள். மத்தியானம் வரையில் சின்னப்பன் முளை செதுக்குவதிலேயே இருந்தான். அதற்குள் ராமாயி வீட்டு வேலை களை எல்லாம் செய்து முடித்துவிட்டு தன் கணவனைச் சாப்பிடக் கூப்பிட்டாள். சின்னப்பன் "நா அப்புறம் சாப்பிட்டுகிறே. புள்ளெயக் கூப்பிட்டுச் சோறு போடு'' என்று சொல்லிவிட்டான்.

ராமாயி மெதுவாக "அக்காள் இப்பத்தான் எழுந்திருந்தாள் போலிருக்கு. சாப்பிடக் கூப்பிடட்டுமா'' என்றாள்.

"தினம் கூப்பிடறதுதான் வழக்கமா?''

"இல்லை இல்லை" என்று இழுத்தாள் ராமாயி. "என்ன இல்லெ?"

'கோவிச்சிட்டுப் பேசாதிருந்தாலும் இருப்பா. ஒரு பேச்சுக் கூப்பிட்ட தினாலே என்ன குறைஞ்சு போயிடும்?"

சின்னப்பனும் இதயம் உள்ளவன் தான். இதயமற்ற போக்கே அவனுக்குப் பிடிக்காது. என்னவோ தெரியாத்தனத்தில் கேட்டிருப்பாள் என்று நினைத்தான்.

"செரி போய்க் கூப்பிடு" என்றான்.

ராமாயி உடனே குழந்தையைத் தேடுகிற மாதிரி "முத்து இங்கயா இருக்கறே? என்று கேட்டுக் கொண்டே நாகம்மா படுத்திருக்கும் அறைக் குள் போனாள்.

"இங்கே அவ இல்லை" என்று நாகம்மாளே பதில் சொன்னாள். ராமாயி கனிவுடன் "எங்காவது அந்தப் பக்கம் இருப்பாக்கா, நீயாவது வாக்கா சோறு திங்க" என்றாள்.

"உடம்புக்கு நல்லாயிருந்தா நீ சொல்லோணுமா ஆயா? என்று எழுந்து உட்கார்ந்து "கொஞ்சம் சுடுதண்ணி இருந்தா கொண்டா" என்றாள்.

உண்மையிலே வென்னீருக்கு அவசியமேயில்லை. ஆனால் நிஜ வியாதிக்காரி என்று காட்ட வேண்டாமா? ராமாயி "இதோ கொண்டாறே அக்கா' என்று வெளியில் வந்தாள்.

நாகம்மாள் தனக்குள், அதிக விறைப்பாயிருப்பதும் ஆபத்தே, முள்ளுமேல் போட்ட வேட்டியை மெள்ள மெள்ளத்தான் எடுக்க வேண்டும். இவர்களுக்குச் சொல்கிறேன் புத்தி என்று நினைத்தாள். சின்னப்பன் தலையை அசைத்து "என்ன ராசி பண்ணீட்டியா?" என்று ராமாயியைக் கேட்டான்.

அவள் சிரித்தாள், "ஓஹா! நீயும் தேவலாமே' என்று அவனும் சேர்ந்து சிரித்தான். அதேசமயம் முத்தாயா சித்தப்பா, "ஆரோ வந்திருக்

காங்க'' என்று சொல்லிக்கொண்டு வெளியிலிருந்து ஓடிவந்தாள் ஆரு என்று விசாரித்தவாறே சின்னப்பன் வெளியே எட்டிப்பார்த்தான். வாசலில் சக்கிலியாள் நின்றிருந்தான். சின்னப்பனுக்கு அவனைக் கண்டதும் பாதி விஷயம் விளங்கிவிட்டது. மைத்துனன் காரியம் தாட்டி விட்டது அவ்வளவு தான் என்னடா? என்று சின்னப்பன் வாய் திறப்பதற்குள், ''அது தானுங்க, பேச்சு மூச்சு அத்துப் போச்சு. உடனே கவுண்டிச்சியோடு புறப்பட வேண்டியது. தானுங்க'' என்றான். இதை அவன் சொல்லி முடிக்கமுக்கால் நாழிகைக்கு மேல் பிடித்தது.

ராமாயிக்கு இதைக் கேட்டதுமே அளவு கடந்த துக்கம் ஏற்பட்டது. அவளுக்குத் தெரியும் சக்கிலியாட்கள் சாவு நேர்ந்தாலும் சீக்கிரத்தில் நேரடியாகச் சொல்ல மாட்டார்கள். இதுதான் அவர்கள் வழக்கம் வேறு யாராவது பாத்தியப்படாதவர்களிடமாயிருந்தால் ''அங்கே ஒரு பெரிய காரியமாப் போச்சுங்க! என்று பளிச்சென்று சொல்லிவிடுவார்கள்.

''இந்தப் பத்து நாளா பல்லிசொன்னது சரியாப் போச்சே! என்று ராமாயி பிரலாபிக்கலானாள். சின்னப்பன் அதறாமல், ''ஏண்டா அப்படி ஒண்ணும் பயமில்லையே?'' ''போறவரை பேச்சு இருக்குமா? '' என்றான்.

சக்கிலி பேசவில்லை. விழியும் மௌனமும் போய் வெகுநேரமாகி விட்டது என்பதைத் தெரிவித்தது. ''ஏண்டாப்பா உசிரு இருந்தா சக்கிலி யாள் விடுவாங்களா? என்று கேட்டுக்கொண்டே சின்னப்பனுடைய பெரியப்பா வந்தார். 'புறப்பட வேண்டியது தா. இதோ சேதி சொல்லி உடறே. காடு கரையிலிருக்கிறவங்க வந்துசேர கொஞ்சம் நேரமாகுமல்ல? என்றார் பெரியவர்.

அவர் சொல்லுவதும் செய்வதும் சரியாக இருக்கும். அரை நொடியில் அங்கும் இங்கும் இருந்த யாவருக்கும் செய்தியைப் பரப்பி விட்டார். அதைக் காதிற் போட்டதும், சின்னப்பனுடைய நெருங்கிய பந்துக்கள் புறப்படத் தயாரானார்கள்.

முதலில் நாகம்மாளும் தங்களுடன் வருவது உசிதமென நினைத் தான். ஆனால் வீட்டைப் பார்த்துக் கொள்ள ஒரு ஆள் வேண்டாமா?

ஆகையால் நாகம்மாளுடன், நீங்க ஊட்டைப் பாத்துக்கிங்க அவ அங்கிருந் தாலும் நா சீக்கிரமா வந்துடறே" என்று முத்தாயாளைத் தோளில் தூக்கி வைத்துக் கொண்டு புறப்பட்டான்.

நீங்க வேணுமானாலும் இருந்து வாங்க" என்றாள் நாகம்மாள் அவள் என்ன நினைத்துச் சொன்னாளோ நமக்குத் தெரியாது. ஆண்களும் பெண்களுமாகப் பத்துப் பதினைந்து பேருக்குப் புறப்பட்டார்கள். ராமாயி 'போய்வாறே' என்று நாகம்மாளிடம் சொல்லவும் மறந்து விட்டாள். ஆனால் நாகம்மாள் அவைகள் ஒன்றையும் அலஷியம் செய்யவில்லை. "நல்ல சமயத்தில் இருவரும் போனார்கள். பொறுங்கள் உங்களைத் தொலைத்து விடுகிறேன்" என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

## 22

ராமாயினுடைய சகோதரன் இவர்கள் போவதற்கு முன்பே உயிர் விட்டு விட்டான். ராமாயி விம்மினாள், விக்கினாள், துடித்தாள்; ஆனால் அவன் எழுந்து வரவா போகிறான்!

"கண்ணான எம் பொறப்பெக்
காணுவது எக் காலம்
பொன்னான எம் பொறப்பெப்
போய்ப் பாப்ப தெக்காலம்?"

என்று பிலாக்கணம் சொல்லி அழுதாள். பயன்தான் ஒன்றுமில்லை. அவன் நாலுபேருக்கு மேலாகத் தன் கடைசிப் பிரயாணத்தையும் முடித்து விட்டான்.

கூட வந்திருந்த ஊர்க்காரர்கள் திரும்பலானார்கள். இரண்டொருவர் சின்னப்பனிடம், "நீ வாரதுக்கு இன்னும் இரண்டொரு நாள் ஆகும் பாவம். எங்கமாதிரி உடனே வந்துவிட முடியுமா? என்னமோ சும்மா உங்க மாமியா அழுது அழுது அரைச் சீவனாப் போறா!" என்று கூறிச் சென்றனர்.

தடியால் அடிபட்ட மாடுபோல் சின்னப்பன் மௌனமாக இருந்தான். என்ன செய்வதென்று அவனுக்கு விளங்கவில்லை.

தன்னுடைய கனவுகள் இராத்தூக்கத்திலேயே மறைந்து மாயமாகப் போனதால் காளியம்மாள் கலங்கினாள். என்னென்ன எண்ணியிருந்தாள்! மகனுக்கு ஒத்தாசையாக மருமகனையும் தன் வீட்டிலேயே வைத்துக் கொள்ளலாம். அதோடு மருமகனது நிலபுலன்களை விற்ற ஆஸ்த்தி வேறு தன்னிடமே இருக்கும்! பார்க்கிறவர்கள் எல்லோரும் வியந்து 'ஆ காளியம்மாளின் அதிஸ்டத்தைப்பார்' என்றல்லவா பேசிக் கொள் வார்கள். இப்படியெல்லாம் பின்னிப் பின்னித் திரித்துவைத்திருந்த அவளது சிந்தனைக் கயிறுகளில் சிக்கு விழுந்து விட்டது. இனிப்பிரிக்கவே முடியாதோ என்னவோ! உபயோகமற்ற ஓட்டை உடைசல் சாமான்போல் அப் பெரிய வீட்டின் ஓர் மூலையில் காளியம்மாள் விழுந்து கிடந்தாள். 'அந்தோ அம்மணி! உன்னுடைய துடிதுடிப்பான நடையும் பேச்சும் எங்கே? அற்புதமான கற்பனைக் கனவுகள் எங்கே? அவையெல்லாம் காளான்போல் மறைந்து விட்டனவா?' என்று கேட்கக்கூட யாருமில்லை.

அன்று வராதவர்கள், இடையிடையே துக்கம் விசாரிக்க வந்து வந்து போவார்கள். கொஞ்சநஞ்சம் பூத்துப்போயிருக்கும் கனலை விசிறி விடுவார்கள். ஆனால் எத்தனை நாளைக்குத்தான் ஸ்வரம் குறையாது அழுவது? அழுது அழுதுதான் அரைச் சீவனாய் விட்டாளே!

ஆச்சு; ஒருவாரமாயிற்று காளியம்மாளின் இதயவேதனையும் சற்று மட்டுப்பட்டது. புத்திர வாஞ்சையில் விழுந்து கிடந்த உள்ளம் மகள் மருமகன் பாசத்தால் தலையெடுத்தது.

சின்னப்பனுக்குச் சீக்கிரமாக ஊர் போகவேண்டுமென்று, ஆனால் எப்படிச் சொல்வது? அங்கே கணக்கற்ற வேலைகளைப் போட்டுவிட்டு, இங்கேயும் இப்படிச் சும்மா உட்கார்ந்து கொண்டிருப்பதா என்று சிந்தித்தான். ஆளுக்கொரு மூலையில் சோர்ந்து கிடக்கும் பெண்களைப் பார்க்க அவ னுக்குப் பரிதாபமாக இருந்தது. கடைசியாகத் தன் மனைவியிடம், 'நா போகாது போனா அங்கே என்ன நடக்கும்? நாகம்மா சங்கதி உனக்குத் தெரியாது? உன் அம்மாவிடம் சொல்லுவது தானே? என்றான்.

ராமாயி "நா அம்மாகிட்ட சொல்றதுக்கு நீங்களே சொல்லுங்களே" என்றாள்.

சின்னப்பனும் அரை மனதாகக் காளியம்மாளிடம் தெரிவித்தான். அவளிடமிருந்து மங்கலான கம்மிய குரலில், "இன்னும் இரண்டொருநாள் பொறுத்துப் போகப்படாதா?" என்று பதில் வரும் என எண்ணியிருந்த சின்னப்பன் ஏமாந்து போனானன் ஏன்! காளியம்மாள் கலகலவெனப் பேசலானாள்.

"சாமி, இனி நீங்கதா எனக்கு மகனுக்குப் பதில் ıமவெ. என்னவோ கடவுள் செயல். இனி அரைக்கணம் உங்களே உட்டு இருக்கமாட்டே எனக்கு இனி உயிரோடு இருக்கலாமென ஆசையில்லை. என்னமோ உங்களிருவருக்காகத் தா இருக்கிறே. இனி யோசித்துப் பிரயோசன மில்லெ. அவளே என்ன செய்யறது என்பதுதாம் பேச்சு உங்க மனசுக்குப் பிரியமானதெச் சொல்லுங்க. அப்படியே செய்யலாம்.

சின்னப்பன் மெதுவாகத் தலையைச் சொரிந்து கொண்டே 'என்னங்க" என்றான்.

காளியம்மாள் அதே குரலில் "நீங்களே சொல்லுங்க" என்றாள். கேள்வி அர்த்தமானாத்தானே பதில் சொல்லலாம். நோயைத் தெரிந்து கொள்ளாமலே மருந்து கொடுப்பார்களா? என்ன, "சொன்னா செரி, நான் அப்படியில்லேன்னு தட்டியா போடுவே' என்று ரொம்பத் தெரிந்த பாவனையில் கூறினான். காளியம்மாளுக்குப் பாலாபிஷேகம் செய்தமாதிரி ஆனந்தம் பொங்கியது. " நா இந்த உறுதியில்தா மவெ போனதையும் மறந்திருந்தே எம் பேச்சுக்கு அட்டி சொல்லவா போறீங்க செரி, நாகம்மா விஷயம் பைசல் ஆச்சு' என்றாள். அப்போதுதான் எந்த விஷயத்தைக் குறித்துக் காளியம்மாள் பேசுகிறாள் என்பது தெரிந்தது.

"உங்களுக்கு அவெ கேட்டது ஒண்ணும் தெரியாதே! பங்கு வேணுமின்னு ரகளை எழும்பி உட்டாளே! என்றான் சற்று எரிச்சலாக.

'ஓகோ! அவளே தொடங்கிவிட்டாளா? எனக்குத் தெரியாதே இருக்கட்டும் நாச்சியப்பெ அண்ணெ இங்கு வந்திருக்கிறான். அவனைக் கண்டு பேசினால் தம்பியிடம் பேசினது போலத்தா, செரி அடுத்த வாரமே கெரயத்தை முடிச்சுக்கலாம். பணம் எட்டு நாளைக்கு மும்பே இப்பவே வேணுமினாலும் நோட்டு நோட்டாக எண்ணி வெச்சிருவான்." என்று காளியம்மாள் சரமாரியாக அடுக்கினாள்.

"அப்படியே முடிச்சுக்கலாம்" என்று சின்னப்பனும் உறுதி தந்தான் அடுத்த கணமே அவன் மனதில் ஓர் நினைவு பிறந்தது. சொந்த ஊர்ப்பாசம் குப்பென்று அவன் உள்ளத்தைக் கவ்வியது. பரம்பரையாக வாழ்ந்த இடத்தை விட்டு வருவதா? அதுவும் அடியோடு சொத்து முழுவதும் விற்றுவிட்டா? பிறர் பார்த்து என்ன நினைப்பார்கள்! ஆனால் பிறருக்காக என் சுதந்திரத்தை குறைத்துக் கொள்ளவதா? யார் என்ன பேசினால் எனக்கென்ன? வம்பர்கள் வீண்கதை கதைக்கத்தான் செய்வார்கள். நான் என் இஷ்டப்படியே நடப்பேன். ஆனால் நாகம்மாள் அவளை எங்கே விடுவது? விடுவதென்ன! ஊரிலேயே வீட்டைக் காத்துக்கொண்டு கிடக்கிறாள். அவள் பக்கம்தானே மணியக்காரர் முதற்கொண்டு! எனக்குத் தான் அவர்கள் விரோதிகள். நான்தான் பயந்துகொண்டு ஓடி வருகிறேன். ச்சை பயமா? இல்லை, நியாயமாக விலகிக் கொள்கிறேன். அந்த முட்டாள்களிடமிருந்து, ஆனால் உலகம்? உம் தலைகால் தெரியாத உலகம். என்ன பிதற்றினால் எனக்கென்ன?

யோசனை "என்னுங்க? அடுத்த வாரமே நானும் வாரே. போவோமே" என்றான். சின்னப்பனும் வேறு ஒன்றும் கேட்காது, 'உம்' என்றான்.

## 23

கயிரறுத்துக் கொண்ட காளை போலவும், சுயேச்சையாக சிறகடித் துப் பறந்து செல்லும் பட்சி போலவும் நாகம்மாள் உல்லாசமாகத் திரிந்து கொண்டிருந்தாள். அவ்வீட்டிற்கு அவளே ராணி. அவள் வைத்ததே சட்டம். வாசல் குப்பையைப் பெருக்கித் தள்ளுவாள். தள்ளாதும் விட்டுவிடுவாள். கன்றை இடம்மாற்றிக் கட்டுவாள். கட்டாதும் விடுவாள். பாலைச் சும்மா காச்சிக் குடிப்பாள். குடிக்காமலும் இருப்பாள். இஷ்டம்

போல் சமைப்பாள். சும்மா இருப்பாள். எங்கு வேண்டுமானாலும் எந்நேரத்திலும் செல்லுவாள். அவளை ஏனென்று கேட்பார் யாருமில்லை. வேகமாகப் பாய்ந்தோடும் காட்டாறுபோல் தன் போக்கில் தலைகால் தெரியாது ஏக அமர்க்களமாய் இருந்தாள். வீடு எந்நேரமும் கலகலப்பாகவே இருந்தது. சதா பேச்சுக்கு ஒருவர் மாறி வந்து கொண்டேயிருப்பார்கள். இரவு பகல் வித்தியாசமின்றி நினைத்த சமயத்தில் அடுப்பு மூட்டுவாள். சாதமா, குழம்பா எதுவும் செய்வாள். தாராளமாக வந்தவர்களுக்கு பரிமாறுவாள். திருப்தியாகச் சாப்பிட்டபின் வம்புப் பேச்சுக்கு கேட்க வேணுமா? ஓயாத ஒரே கொண்டாட்ட மயம்தான்!

கெட்டியப்பன் இங்கேயே 'முகாம்' போட்டுவிட்டான். அடடா! அவன் தடபுடல்களைப் பார்த்தால் "ஏதேது இந்த ஆசாமி தான் இந்த வீட்டுக்குச் சொந்தக்காரன் போலிக்கிறதே! என்று எண்ணத் தோன்றும்.

"என்ன கோழி போடலாமா? என்பான் முரட்டுத்தொனியில்.

"ஆஹா அதற்கென்ன?" என்பாள்.

உடனே மிளகு அரைத்தாகி விடும். கண்மூடி விழிப்பதற்குள் கோழி பக்குவமாகி விடும். அப்புறம் கேட்க வேண்டுமா, குளு குளுவென்ற தென்னங்கள்ளுடன் ஆனந்தமாக உணவை தள்ள வேண்டியதுதான். இடையில் சில வேடிக்கைகளும் நடக்கும். முதலியார் நடுவில் சில பேச்சுக்களைப் போட்டு மடக்குவார்.

'ஆமாங்க ஐயா நீங்கெல்லா குடிச்சுட்டு போறவங்கதா. உங்களால் என்னத்தை சாதிக்க முடியும்? என்பார்.

"பார்க்கலாமே" என்பான் கெட்டியப்பன். "என்னத்தைப் புடிச்சிப் பார்க்கிறது?" அவன்களெல்லாமே வந்து வாங்கிக் கொள்ளட்டும் என்று சின்னப்பன் பேசியது தெரியாதா? கேட்டுப் பாருங்களே நாகம்மாளே சொல்லும் "என்னவோ பாக்கிறீங்களாம்" என்று ஏளனமாக நாராயணசாமி ஆரம்பிப்பான். கெட்டியப்பன் தைரியமாக "அட கட்சிக்கு இருந்தே இருக்குது" என்பான் தீர்மானமாக.

இதைக்கேட்டு இருவரும் சிரிப்பார்கள்.

முதலியார் சட்டென,“அப்படியெல்லாம் திடுபுடென கை வைப்பது கூடாது.” அது என்ன ஒரு நிமிஷத்தய காரியம் நாமும் பொறுத்துப் பார்ப்போம். அக்கிராமத்திற்கு நாம் போகவேண்டாம் என்பார். வழியில் போறவன் கூப்பிட்டு செருப்பால் அடித்தாலும் முதலியார் மேலும், கீழும் பார்த்துக்கொண்டு முனகாது போகிற ஆசாமி, இவ்வளவு தூரம் பேசுகிறார்!.

“ஆமாமப்பா அது நெசந்தா” கெட்டியப்பன் ஆமோதிப்பான்.

நாகம்மாள் “மணியக்கார அண்ணனும் இதுக்கு ஒத்து வருவாங் களா!” என்றாள்.

முதலியார் தாழ்ந்த குரலில், “கண்ணத் திண்ண குருடனும் நாயத்தை ஒத்துக்கிட்டுத்தானே ஆகணும்? அண்ணனெ அப்படி ஒத்துக்கொள்ளச் சொல்றவன் நானவல்லவா? அதைப்பத்தி நீங்கள் துளிகூட கவலைப்பட வேண்டியதில்லை” என்று சொல்லிவிட்டு இரண்டு மூன்று செலவுக்கு வாங்கிக்கொண்டு வீடு போய்ச் சேருவான். தனக்காக இவ்வளவு பேசுகிற மனிதனுக்கு நாகம்மா ‘இல்லை’ யென்றா சொல்லி விடுவாள். தாலி தண்டையாவது விற்றுக் கொடுப்பாள் அல்லவா?’ ஆமாம் இப்படிக் கொடுத்துத்தான் அடியோடு நாசமடைய வேண்டும். ஒரே நாளில் ‘கெட்டுப்போ’ என்றால் கெட்டா போவார்கள்?

தனித்திருக்கையில் நாகம்மாளுக்குச் சில சமயங்களில் இவைகள் எல்லாம் தோன்றும். தன்னைத்தானே வெறுத்துக் கொள்வாள். நொந்து துக்கிப்பாள்.

“நான் ஏன் இங்குவந்து சேந்தனோ? நல்ல மரத்தில் நரையான் விழுந்தமாதிரி பெரிய குடும்பத்துக்கு அவக்கேடாக வந்து சேர்ந்தனே?” தலைமுறை தலைமுறையாக ஐக்கியமாக வாழ்ந்திருந்தவர்களுக்கு கெட்ட பேர் உண்டுபண்ணப் பார்க்கிறேன். பங்கு பிரிக்க வேணுமென்று பாழ்படுத்த ஆரம்பிக்கிறேன், ஐயோ சின்னப்பன் எவ்வளவு அன்பாக வைத்திருக்கிறான். ஒரு வார்த்தை காரமாகச் சொல்வானா? நல்ல

மனத்தை அன்று புண்படுத்தி விட்டேனே! இனியாவது நல்லதனமாக நடந்து கொள்ளவேண்டும். சாட்சிக்காரன் காலில் விழுவதைவிட சண்டைக் காரன் காலில் விழுவதே மேல் அல்லவா?

இவ்வித நினைவுகள் ஒரு வினாடிக்கப்புறம் பாதரஸம் போல் நிலை கொள்ளாது. 'அப்படிச் எதற்கு இருப்பது? கட்டறுத்துக்கொண்டு பத்து நாள் இருந்தாலும் அதுவே அடிமையாகப் பத்தாயிரம் வருஷம் இருப்பதைவிட மேலல்லவா? எனக்கென்று தனியாக எல்லாம் இருக்க வேண்டும். நான் நினைத்தால் எதையும் செய்ய வேண்டும். என் மகளுக்கு நகை நகையாகப் பூட்டிப் பார்க்க வேண்டும். இந்த பிசினாரிகள் அதற்குச் சம்மதிப்பார்களா? அடேயப்பா, அன்றைக்குக் கேட்டதும் கேட்காததுமாய் சீத்துப் பூத்தெனச் சீறுகிறானே! யார் சம்பாதித்த சொத்து? என் புருஷன் சொத்து எனக்குச் சேராதா? இத்தனை கோபம் எவ்வளவு நாளைக்கு வருகிறதெனப் பார்க்கிறேன். நாகம்மாள் இப்படி உக்கிரமாக இருக்கும் வேளையில் கெட்டியப்பனும் இரண்டொரு வார்த்தை சொல்லி வைப்பான். எரிகிற நெருப்பிற்கு எண்ணெய் விட்ட மாதிரி அவள் உள்ளத் தணல் கொழுந்து விட்டு எரியும். யாராயிருந்தால் என்ன? சதா ஒருவருடைய துர்ப்போதனைக்கு ஆளாகிவிட்டால் அப்புறம் அவர்கள் இதயம் மாறுவதில் ஆச்சரியமில்லையா?

## 24

அன்று புதன்கிழமை. நாகம்மாள் ரொம்ப முகமலர்ச்சியுடன் இருக்கிறாள். கண்ணாடியைச் சீந்தாதவள் அடிக்கடி எடுத்துப் பார்க்கிறாள். தும்பைப் பூப்போன்ற வெள்ளைப் புடவையை அப்படியும் இப்படியுமாகத் திருப்பிச் சீராகச் சொருகிக் கொள்கிறாள். இன்று ஏது இவ்வளவு குதூகலம்? இன்று சந்தை நாளென்றா? இல்லை வாரந்தவறாதுதான் சந்தை வருகிறது. அப்போதெல்லாம் இவ்வளவு ஆனந்தம் ஏற்பட்டதில் லையே பின் இப்பூரிப்புக்குக் காரணம் என்ன? மணியக்காரர் வருகிறார்.

இத்தனை நாளாக அங்கும் இங்கும் பார்த்து யோசனை சொல்லி வந்தவர், இன்று நேரிலேயே வருகிறார். அவராக வீடுதேடி வருகிற தென்றால் நாகம்மாளுக்கு அதைவிடச் சந்தோஷச் செய்தி வேறு

இருக்க முடியுமா? வாசல் பக்கம் போவதும், உள்ளே வருவதும், பொழுதைப் பார்ப்பதும், யோசிப்பதுமாய் இருந்தாள். அப்பொழுது அடிக்கும் மாலை வெயிலை மாற்றி காரிருள் மயமாகச் செய்திருப்பாள். ஏனென்றால் இருட்டினவுடன் வருவதாக மணியக்காரர் தெரிவித்திருந்தார்.

முலாம் பூசிக் கொண்டிருந்த இயற்கை தன் அழகுக் கதிர்களைக் கொஞ்சம் கொஞ்சமாக அடக்கிற்று. மரங்கள் உச்சியிலும் வீட்டுக் கூரையிலும் படிந்திருந்த தங்க நிறம் மெதுவாக மறைந்தது. இரவு தன் நீண்ட கரும் போர்வையை விரித்தது. இரவின் சாந்த மடியிலே பட்சி ஜாதிகள் தலை சாய்த்தன. அந்த அமைதியான வேளையில் சித்திரப் பாவை போன்று நாகம்மாள் அமர்ந்திருந்தாள். ஒவ்வொரு சருகின் அசைப்புக்கும் சட்டெனத் திரும்புவாள். சிறுகாற்றில் ஓலைகள் படபடக்கும் போது செருப்புச்சத்தம் என்று எண்ணி ஏமாறுவாள். அர்த்தமற்ற சத்தம் 'ஹோ' என எழும். திடுக்கிட்டுத் தலை நிமிர்வாள். 'கெட்டியப்பன் முன்னால் வந்திருக்கப்படாதா!' என்று அவன்மேல் சலித்துக் கொள்வாள். இவ்வித விவரிக்கமுடியாத ஆவலுடன் எதிர்பாத்துக் கொண்டிருந்தாள்.

"என்னத்தா வார்த்தை பேசுவா" என்று அவள் கவனத்தைத் தெரிந்தவன் போல் கெட்டியப்பன் குரல் கேட்டது.

"எங்க முகத்துக்காக உங்களை ஒண்ணும் பேசமாட்டாங்க" என்று முதலியார் தமாஷ் பண்ணினார்.

நாகம்மாள் விளக்கை உயர்த்திக் கதவை நன்றாகத் திறந்து "வாங்க வாங்க" என உபசரித்தாள். பாயை எடுத்து அவள் விரிக்கு முன்பே, இல்லெ இல்லெ, வேண்டாம்" என்று முதலியார் தடுத்தார்.

உங்களுக்கு இல்லை ஆனா......... என்று மணியக்காரர் முகத்தைப் பார்த்துவிட்டு நாகம்மாள் மறுபடியும் பாயை எடுக்கப் போனாள்.

"எனக்குத் தெரியும் இதபாருங்க, கட்டில் இருக்குது அவுங்க உட்கார்ந்துக் கிடட்டும்" என்றார் முதலியார்.

எங்கெதா உக்காந்தா என்னப்பா? என்று பெரும் போக்காகக் கூறி மணியக்காரரும் கீழேயே உட்கார்ந்தார்.

மணியக்காரர் அவ்வறையின் ஒவ்வொரு மூலையையும் மேலும் கீழும் நோக்கியவாறு, வெகு நாளைக்கு முன் வந்தது. பத்துப் பன்னண்டு வருஷமிருக்கும். அதுக்கப்புறம் ஆரு வந்தாங்க போனாங்க? என்ன நாகம்மா, அந்த ஓரத்தில் சின்ன மாடக்குழி ஒண்ணு இருந்ததே. இப்போ மூடீட்டிங்களா? என்று கேட்டாள். நாகம்மா என்னமோ யோசித்துக் கொண்டு நின்றாள்.

கெட்டியப்பன் ஆச்சரியத்துடன், “உங்களுக்கு அதெல்லா எப்படி நெனப்பிருக்துது?” என்றான் “இந்தப் ஆச்சரியத்தில் தா பேசமாட்டாமெ நிக்கறதைப் பாருங்க!” என்று நாகம்மாள் இரண்டு மூன்று தரம் கேட்டாள்.

மணியக்காரர் சிரித்துவிட்டு “அது என்னமோ சின்ன சங்கதி, என்ன நாகம்மா, நா சீக்கிரமா இப்போ போயாக வேண்டும். ஆராவது பார்த்தா நாளைக்கி சின்னப்பெ வந்ததும் என்னாவாவது சொல்லி வைப்பாங்க. எனக்கெல்லா இங்கே என்னவேலென்னு அவெ அப்படியும் இப்படியும் பேசுவான். நானும் சும்மா இருக்க மாட்டேன் கோபத்தில் கண்டபடி பேசிட்டா இன்னும் சங்கடம் தானே! இத்தனை தொல்லை யில்லாம நடந்து கொள்றது நல்லதல்லவா? என்ன நா சொல்றது?” என்றார் அவளைப் பார்த்துக்கொண்டே.

நாகம்மாள் தலையைக் குனிந்தபடி ‘உங்களுக்குத் தெரியாததை நா என்ன சொல்லப்போறே? எல்லாம் நீங்க சொன்னா செரி” என்றாள்.

“காலையிலே சின்னப்ப வரப்போறானாம். எனக்குத் தகவல் கிடைத்தது. அகத்தியம் நாளைக்கு வந்துவிடுவான் என்று தான் நானும் நினைக்கிறேன். போய் பதினைந்து நாளைக்கு மேல் ஆகுதல்ல? தோட்டங் காடுகளெ விக்க ஏற்பாடு பண்ண இவ்வளவு நாள் போதாதா?” என்றார்.

‘என்ன ஏற்பாடு ஆயிட்டதா” என்று திகைப்புடன் நாகம்மாள் கேட்டாள்.

"ஆனமாதிரிதான் கையெழுத்து ஒண்ணுதா பாக்கி,"

"அப்புறம்?"

"நீ ஏ கலங்க வேண்டும்? எதுக்கும் அஞ்சாதே?" எனக்குச் சரி பாதியைப் பிரிச்சுடு என்று தாராளமாகக் கேளு. சும்மா மிரட்டினா அதெல்லாம் தெரியுமப்பான்னு சொல்லிடு. அப்படியாச்சா? லொட, புட, அது செய்திடுவே, இது செய்திடுவேன்னா எனக்குக் கொடுத்தபின் என்ன வேண்டுமானாலும் செய்து கொள் என்று தைரியமாகச் சொல்லு நீயேன் தயங்கோணும்? இனி தாமதித்தால் வெள்ளம் தலைக்கு மேல் போவது நிச்சயம்.

வாஸ்தவம் தான் என்று முதலியார் பேச்சை ஆமோதித்தார். நாகம்மாள் கொஞ்ச நேரம், மௌனமாயிருந்துவிட்டு, "நான் என்னென்ன செய்யோணும்? என்ன செய்யச் சொல்றீங்க?" என்று கேட்டாள்

"அண்ணக்கி மாதிரி அலண்டு போய் பதில் பேசாது உட்டிடாதே. எனக்கு உண்டானதைப்பிரித்து விடுனு கண்டிப்பாகக் கேள். பின்னால் வாரதுக்கு நாங்கள் இருக்கிறோம். அவன் என்ன ஆகாசத்திலா பறந்திடு வான். நீ மட்டும் ஒறச்சு நிண்ணா விலைக்கு வாங்க ஒருவன் கிட்ட வந்து விடுவானா? என்றார் மணியக்காரர். நாகம்மாள் "ஆகட்டும் நீங்கள் சொன்னபடி கேக்கறேன்' என்றாள்.

பின்பு மணியக்காரர் கெட்டியப்பனிடம் 'அவன் வந்த பிறகு இந்தப் பக்கம் அடிக்கடி தலை காட்டாதே. தப்பாக நினைக்க இடம் உண்டாகும்" என்றார்.

"அண்ணா இப்போதே நான் சாளைக்குப் போய்விடுகிறேன். நீங்கள் கூப்பிடுகிற சமயம் வருகிறேன்" என்று சிரித்துக்கொண்டே சொன்னான்.

"நாங்களும் அவரோடு போறோம்' என்று முதலியார் சொல்லவும் மணியக்காரர் சிரித்துக் கொண்டு எழுந்தார். அவர்கள் போனபின் சிறிது

நேரம்வரை நாகம்மாள் அப்படியே உக்கார்ந்து கொண்டிருந்தாள். கதவைத் தாளிட்டுப் படுக்கவும் இஷ்டமில்லை. உட்கார்ந்திருக்கவும் பிடிக்கவில்லை. கலவர மனத்துடன் யோசனையில் முழுகினாள். அப்போது சொத்தென்று ஒரு பூச்சி முகட்டிலிருந்து கீழே விழுந்தது. பல்லியால் கவ்வப்பட்ட பாதிப்பாகம் போக மீதிப்பாகமே தரையிற் துடித்துக்கொண்டிருந்தது. அந்த மரித்துப்போகும் பூச்சியை கண்கொட்டாது பார்த்துவிட்டு மேலே கூரையைப் பார்த்தாள். ஒட்டறை அடித்து வருஷக்கணக்காகிறது. இதில் புகைக்கலப்பு வேறு கன்னங் கறேலெனக் கப்பியிருந்தது. மேலும் கீழும் பார்க்கப் பார்க்க நாகம்மாளுக்குக் கசப்பாக இருந்தது.

"என்ன இது ஒரே குப்பை மயம்? வந்தால் என்ன சொல்லுவார்கள்? சொல்வதென்ன? எனக்கே அசங்கியமாக இருக்கிறதே." காலடி ஓசை கேட்டது. திடுக்கிட்டு நோக்கினாள். யாரென்று தெரியவில்லை. ஒரு வேளை கெட்டியப்பனாக இருக்குமா? அல்லது முதலியாரா? யாரென்று அவளால் நிச்சயம் செய்ய முடியவில்லை. என்ன கோயில் பாளத்தாளா? என்று கேட்டுக்கொண்டு பெரியண்ணகவுண்டன் வந்தான். அயலூரிலிருந்து கலியாணமாகி வரும் பெண்களை அந்த ஊர்ப்பெயரைச் சொல்லியேதான் அநேகமாகக் கூப்பிடுவார்கள். தன்னை அவ்விதம் பெயரிட்டு அழைப்பவர் யாரென்று நாகம்மாள் நோக்கினாள்.

'நீங்கதானா என்னெப் பயப்படுத்தினது' என்றாள். 'நானே அல்ல என் தாத்தா வந்தாலும் உன்னெப் பயப்படுத்த முடியுமா? இந்த அர்த்த ராத்திரியில் நீதா ஆரையோ பயப்படுத்த உட்கார்ந்துக்கிட்டிருக்காய்' என்று சொல்லிவிட்டுப் பெரியண்ணன் கேட்டான்.

நாகம்மாளும் கூடச் சிரித்துவிட்டுப் பின்பு ரொம்ப அனுசரணையாக "இன்னேரத்தில் எங்கிருந்து வாரீங்க? " என்றாள். பெரியண்ணன் "பேச நேரமில்லை" என்று சொல்லி சுருக்கமாக "கருப்பட்டி வண்டிப்பின்னால் வந்தேன். நொடித்தடம் வண்டி இடறி அகாலத்தில் ஏதாவது ஏற்பட்டால் என்ன செய்வது? சின்னப்பெ இருந்தாலும் சந்தைக்குப் போயிருப்பான். என்ன பண்றது? இருக்கிற வரையிலும் செய்து தானே தீரோணும்? ஆயா, நேரமாய்ச்சு, வண்டி வெகுதூரம் போயிட்டது" என்று அடியெடுத்து வைத்தான்.

"வாசலில் முளை அடிச்சிருக்கு பாத்துப் போங்க" என்று நாகம்மாள் சொல்லச்சொல்ல அவன் முளையில் மோதிக் காலை நொண்டிக் கொண்டே போனான்.

## 25

முதல்நாள் இரவு சுகமாகப் படுத்து நித்திரை செய்தவள் இன்றிரவு நரக வேதனை அனுபவித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறாள். முதல்நாள் சிரிப்பும் சந்தோஷமுமாக பேசிக்கொண்டிருந்தவர்களிடம் இன்று நாகம்மாளால் உற்சாகமாக நடந்துகொள்ள முடியவில்லை. மணியக்காரர் வீட்டு உட்புற ஆசாரத்தில் தூணில் சாய்ந்து உட்கார்ந் திருக்கிறாள் நாகம்மாள். அடிபட்ட குழந்தை மேலும் கீழும் பார்ப்பதைப் போல மணியக்காரர் தம்முடைய கிருதா மீசையைத் தடவிக்கொண்டே ஆழ்ந்த யோசனையில் மூழ்கிக்கொண்டிருந்தார். கெட்டியப்பன் குனிந்ததலை நிமிரவில்லை. முதலியார் முகத்தில் மட்டும் எவ்விதக் குறியுமில்லை .நாகம்மாளைப் பார்க்கும் போதெல்லாம் முகத்தில் மட்டும் அனுதாபக்குறியை எங்கிருந்தோ வரவழைத்துக் கொண்டார். மூலையில் படுத்திருந்த பெரியவரின் கட்டில் கிறீச் சப்தமும் இடையில் மேற் புறத்திலுள்ள வண்ணானின் வீட்டிலிருந்து அரைகுறைப் பேச்சுச் சத்தமும் காதில் விழும், வண்ணான் அடிக்கடி "கழுதை கழுதை" என்று சொல்வது கழுதையைப் பற்றியா அல்லது அவன் மனைவியைப் பற்றியா என்பது நமக்குத் தெரியாது

என்னவோ எல்லாமே போயிட்டது போல இப்படி உட்கார்ந்திட்டாங் களே என்று முதலியார் ஆரம்பித்து, "நாம் எதிர் பாத்ததுதானே இவைகளை யெல்லாம்' என்றார்.

மணியக்காரர் திடுக்கென தலையைத் தூக்கினார். பாவம் அவர் இதொன்றையும் எதிர்பார்க்கவில்லைப் போலிருக்கிறது. "நீங்க சொல்ல வேண்டியிருக்க, சும்மா பேசாமெ இப்படி செலயாட்ட உட்கார்ந்துட்டா?" என்றார் முதலியார்.

மணியக்காரர் கொஞ்சந் தொண்டையைத் தீட்டினார். ஆனால் பரபரப்பு நீங்கவில்லை.

'எப்படி அதை இன்னொரு தரம் சொல்லு. நேற்று நீ தூங்கிக் கொண்டிருக்கும்போது வந்து கதவைத் தட்டி" என்று சொல்லி நிறுத்தினான் கெட்டியப்பன். அதைச் சும்மா கேட்பதில் என்ன இருக்கிறது? என்று சலிப்புத் தட்டியவர் போல் மணியக்காரர் சொல்லவும், நீங்க என்ன இப்படியெல்லாம் மெழுகிவிடுகிறீர்கள்? அப்புறம் பார்க்கப்போனா கல்லும், முள்ளும் நிறைந்த இடம் கூட சுத்தமாகத்தான் இருக்கும். சின்னப்பன் மேல் குற்றம் சொல்லுவதற்கே இடம் இருக்காது என்று கொஞ்சம் அழுத்தமாகவே முதலியார் கூறினார்.

"எப்போதுதான் சின்னப்பனிடம் குற்றம் இருக்கப் போகிறது?" என்று பேச்சு முடிவதற்குள் பெரியவரிடம் இருந்து பதில் வந்தது. அவர் கட்டில் சமீபத்தில் இருந்ததால் அவர் சொல்லுவது நன்றாகவே இவர் களுக்குக் கேட்டது.

"கட்டுச் சோற்றுக்குள் எலியை வைத்துக் கட்டியதுபோல்" என்று கெட்டியப்பன் வேடிக்கையாகச் சொல்லிக்கொண்டு "உங்களையும் கட்டி லையும் அக்கட்டாலே கொண்டுபோய் வெச்சுட்டுதா நாங்க பேசணும்" என்று எழுந்தான்.

"சும்மா உட்காரு" மணியக்காரர் அதட்டினார். பெரியவர்நானே எழுந்து போயிடறே ஆனா உனக்குப் பயந்துகிட்டல்ல. "என்ன கெட்டியணா! இங்கே ரொம்ப வேக்காடா இருக்குது." காற்றாட அந்தப் பக்கம் பொறெ. போறதிற்குள் சின்னப்புள்ளே கிட்ட ஒரு வார்த்தை சொல்லோணும்' என்று நாகம்மாள் புறம் திரும்பினார். எப்போதும் மரியாதையாகவே அவரிடம் நடந்துவந்த நாகம்மாள் எழுந்திருக்க முயன்றாள். பெரியவர் "வேண்டா உட்காரம்மா," ஒரு வார்த்தை பாக்குக் கடிக்கிற நேரத்திற்குள் சொல்லிடறேன் என்று தொடங்கினார்.

"**திருமனை செய்யத்தெரியாதவெ தேர்வேலக்கு அச்சாரம் வாங்கி னானாம்**" ஒரு காணி நிலத்தைக் கிளறி பாங்காப் பிழெக்கத் தெரியாத இந்த கெட்டியப்பனா உனக்குப் பங்கு வாங்கிக் கொடுக்கிறவன்? இது எல்லா நடக்காத சங்கதிக. ஒரு நாளைய கூத்துக்கு மீசையெ சிரைத்த கதையா முடியும். இப்போ பாரு ஊரும் குடித்தனமா இருந்தவ குழந்

தையெ உட்டுட்டு வெளியில் வந்து திண்டாட்டத்தில் மாட்டிக்கொண்டாய். நீ சொன்னதெல்லாம் நானும் கேட்டேன்.

"நீ யாருக்காக இந்தப் பங்கு பிரிக்கச் சொல்றாயோ அந்தக் குழந்தைகூட. உங்கிட்ட வரமாட்டேங்குதுன்னா, பின் என்னத்துக்கு இந்தச் சச்சரவு எல்லாம்? இதெல்லாம் அவர்கள் போதனை. 'அது இது' என்று காரணம் சொல்லாதே. அதெல்லாம் பிரயோசனமில்லை. இப்போ முதலியார் சொன்னதுபோல எல்லாம் முழுகிப் போயிடல்லெ. நீ பேசாமெ ஊடுபோய்ச் சேராயா. ஊர் சிரித்ததிற்கப்புறம் போவதை விட விசயம் மூணாம் பேருக்குத் தெரிவதற்கு முன்பே நல்லதனமா போயிடுவது நல்லது."

நாகம்மாள் ஒன்றுமே பேசவில்லை. பதிலுக்குக் காத்திராமல் பெரியவரும் அப்பால் போய்விட்டார்.

"செரி வழக்கப்படி இது நடப்பது தானே என்ன நீங்கள் கூடப் பேச்சிலே மயங்கிவிட்டமாதிரி இருக்கிறதே" என்றார் முதலியார்.

இதைப்போல ஐம்பத்தெட்டுப் பேச்சுத்தான் என்னை மயக்க முடியுமா?" நா வேறு சங்கதியைப் பற்றி ஆலோசித்தேன் என்றார் மணியக்காரர்.

"அதைத்தா சொல்லுங்களே" என்று நாகம்மாள் கேட்டாள்.

நீ வீட்டுக்குப் போய்விடக்கூடாதா? கொஞ்சம் தயங்கிக் கொண்டுதான் சொன்னார். அனைவரும் மௌனமாயிருக்கவே 'அங்கிருந்து கொண்டு நாம் காரியத்தை சாதிப்பதை விட வெளியில் இருப்பது அவ்வளவு சிலாக்கியமானதா?" என்றார்.

"அது சிலாக்கியமோ கிலாக்கியமோ, இனி அந்தப்பேச்சு இல்லை நா அந்தப்பக்கம் கூடதலெ வெச்சுப் படுக்கமாட்டே. அவர்கள் கொளமாத் தைத் தெரிந்த பிற்பாடு அங்கு இருந்து கொண்டிருக்கலாமா? வெசம் வைக்கக்கூட அஞ்சமாட்டாங்க. உங்களெ நா நம்பினெ. நீங்க எப்படி உட்டாலும் செரி."

அவளுடைய வேகத்தையும், உருக்கத்தையும் கண்ட முதலியார், 'ஒரேயடியாகக் கோவிக்கிறீங்களே. நாளைக்கு நாலு பேருக்கெதிரில் சின்னப்பனிடம் காட்ட கொஞ்சம் வெச்சக் கொள்ளுங்க' என்றான்.

'சும்மா இரப்பா, உனக்கு எழவு ஊடுன்னும். கலியாண ஊடுன்னும் வித்தியாசம் தெரிவதில்லெ. சும்மா ஒரே சிரிப்புத்தானா? ஆனா நீ சொன்னதிலும் உம்மை இருக்குது. அப்படிச் செய்தா என்ன?"

"எப்படி?"

"எப்படியா? அதுதான் பொது மனுசர் பத்துப்பேரைக் கூட்டி இதற்கு என்ன சொல்றீங்கன்னு கேக்கிறது. சின்னப்பெ நில புலன்களை வித்துக் கொண்டு ஓடி விடுவதற்கா எல்லோரும் சாதகமா இருப்பாங்க? என்று மணியகாரர் சுற்றிலும் பார்த்துக் கொண்டே கேட்டார்.

கெட்டியப்பன் 'இதிலெல்லா ஒண்ணும் காரிய மில்லீங்க" என்றான்.

"என்ன?" என்று மற்றவர்கள் ஏக காலத்தில் கேட்டார்கள். நாளக்குக் காலயிலே ஏத்துப்பூட்ட சின்னப்பெ தோட்டம் வந்ததும் போய் தடுத்துடுவது.

"என்ன, நம்முடைய ஆளுகளெ உட்டா?" என்று மணியக்காரர் இடை மறித்தார். "இல்லெ, இல்லெ. நாகம்மாளை உட்டே, ஏன்னு கேளுங்க. அப்படிச் செய்தால் தா அக்கம் பக்கம் நாலு பேருக்கு சங்கதி பளிச்சினுபடும். அப்புறம் பேச்சு எடுப்பதற்கும் பேசுவதற்கும் வகையா இருக்கும்' என்றான்.

"ஒரு வகையில் எனக்கும் சரியாகத் தோணுதப்பா" என்று மணியக்காரர் ஆமோதித்தார்.

"ஆனா நா ஒருத்தியும்.... என்று நாகம்மாள் சற்று தயக்கமாகச் சொல்லவும் "நா எங்கே செத்தா போயிட்டே? கூட வேணுமானா இன்னம் நாலுபேரைக் கூட்டிவாறே" என்றான் கெட்டியப்பன்.

"அடேடே, கலகத்துக்குப் போற மாதிரி அப்படியெல்லாம் செய்து டாதே." சும்மா எங்கயோ அசந்தர்ப்பமா போனமாதிரி போ அதுகூட வேண்டியதில்லெ. என்ன நாகம்மா, ஆள் எதுக்கு சொல்லு பார்க்கலாம்? பின்னால்தா பேசிக்கொள்ள நாங்கள் இருக்கிறோம். அவ்வளவு செலவு ஆனாலும் செரி நா இருக்கிறே. உன்னெ அந்தரத்தில் உட்டுட மாட்டோம். தைரியமாக இரு" என்றார் மணியகாரர்.

"சரி காலயிலே நா தோட்டத்துக்குப் போயி தடுத்துட வேண்டியது. அவ்வளவுதானே' என்றாள் நாகம்மாள். எங்கப்பா நம்ம தடியைக் காணோம் என்று கெட்டியப்பன்எழுந்தான். "நீயும் தூங்கப்போ" என்றார் மணியகாரர்.

## 26

ராமாயி இப்போது ஒரு புது வழக்கத்தைக் கைக்கொண்டிருந்தாள். அதுதான் பேசப் பேசத் தூங்குவது. என்ன பேசினாலும் தெரியாது. ஏதோ வாயில் வந்ததைச் சொல்லிவிட்டுக் குறட்டை விடுவது ரொம்பச் சர்வ சாதாரணமாகப் போய்விட்டது. சின்னஞ்சிறு அசைப்புக்கே திடுக்கிட்டுத் தலை தூக்கும் தன் மனைவி ஏன் இப்படித் தூங்குகிறாள் என்ற விபரத்தை ஏனோ சின்னப்பனும் கேட்பதில்லை. இப்போது இரண்டு தரம் குரல் கொடுத்தும் ராமாயி உம் கொட்டிக்கொண்டே பேசாமல் இருந்த தற்கும் இவன் கோபித்துக் கொள்ளவில்லை.

சின்னப்பனுக்கு எத்தனையோ கவலைகள். மைத்துனன் பிரிவுக்குப் பின் தன் குடும்பத்திலும் பிளவு ஏற்பட்டுவிட்டது. ஆனால் முக்கியமாக நாகம்மாள் வாசற்படி தாண்டியதுதான் அவனுக்கு மிகுந்த வருத்தத்தைக் கொடுத்தது. அதிலும் மணியக்காரர் வீட்டிற்குப் போயிருக்கிறாள். என்பதைக் கேட்டு அதிக ஆத்திரம் கொண்டான். எதற்கும் தான் ஒன்றும் முன்னால் போவதில்லை என்று திட்டம் செய்து கொண்டான். ஊரார் பேச்சைக்கேட்டு இப்படிக் குட்டிச்சுவராய்ப் போய்விட்டாளே என்று நினைக்கவும் அவனுக்கு இரக்கமாகத்தான் இருந்தது.

தன்னுடைய அண்ணன் காலத்தில் நிகழ்ந்த அனேக சம்பவங்கள் நேற்றுத்தான் நடந்தது போலிருந்தது. இவனுக்குக் கலியாணமாகுமுன்

குளிப்பதற்கெல்லாம் வெந்நீர் நாகம்மாளே எடுத்து வைப்பாள். வேண்டா மென்று மறுத்தாலும் ஒரு தரத்துக்கு இரண்டுதரமாக முதுகு தேய்த்து விடாது இருக்கமாட்டாள். எந்தவித கல்மிடமும் இல்லாதிருந்தவள் இன்று விஷமாக மாறிவிட்டது அவனுக்கு ஆச்சரியமாகத்தான் இருந்தது. நாகம்மாள் கோபத்தில் வீட்டை விட்டுப் போய்விட்டாளே யொழிய, இவள் குழந்தை ஏனோ தாயுடன் செல்ல மறுத்துவிட்டது. இதற்குக் காரணம் ராமாயி காட்டும் அபாரவாஞ்சையா?

யாரோ கடவையைத் திறந்து கொண்டு வரவும் வெளியே பந்தக்காலில் கட்டியிருந்த எருமை தான் உள்ளேவருகிறதாக்கும் என, 'த்த கெரகம்' என்று சின்னப்பன் விரட்டினான். இவனுடைய அதட்டலுக்கு எருமையாயிருந்தால் அடுத்த எட்டு எடுத்து வைத்திருக்காது. ஆனால் விருந்துக்கு அழைக்க வந்த மாரி நாவிதன் அப்படிப் போய்விட முடியுமா? வந்த சிரிப்பை அடக்கமுடியாது அவன் சிரித்துக்கொண்டே வந்தான்.

'சாமி பந்தி உட்டாச்சுங்க. தேவைக்காரர் வளவிலே சாப்பிட்டுக்குக் கூப்பிடறாங்க'' என்றான் மாரி.

சின்னப்பன் சாப்பிட்டு வெகு நேரமாயிருந்தது. அவன் மனைவியும் முத்தாயாளும் கூட சாப்பிட்டு விட்டு படுத்துக்கொண்டார்கள். மத்தியானமே விருந்துச் சங்கதி தெரியுமென்றாலும் அவனுக்குப் போக இஷ்டமில்லை. பத்துப் பேருக்கு முன்னால் இப்போதெல்லாம் போவதென்றாலே அவனுக்கு நெருப்பு மேல் நடப்பதைப் போலிருந்தது. அவனுடைய இஷ்ட தெய்வம் பிரசன்னமாகி எங்காவது மனிதப் பூண்டற்ற ஒரு இடத்திற்கு அவனை அழைத்துப் போவதாகச் சொன்னால் சந்தோஷமாக அந்த அன்பு அழைப் பிற்கு உட்பட்டிருப்பான்.

"இப்ப வாரமப்பா நீ போ!'' என்று சின்னப்பன் சொன்னான் தான் போகாவிட்டாலும் வெளிக்கு ஏன் காட்டிக்கொள்ள வேண்டும் என்று இப்படிச் சொன்னான். 'சரி சட்டுனு வாங்க' என்று கூறிவிட்டு வேறு வீடுகளை நோக்கி மாரி வேகமாக நடந்தான்.

பந்தக்காலில் சாய்ந்தபடி உட்கார்ந்து கொண்டே சின்னப்பன் எதைப்பற்றியோ யோசித்தான். எப்படிச் சிந்தை சென்றாலும் கடைசியில்

நாகம்மாள் விஷயத்திலேயே வந்து நின்றது. "இன்னம்தான் என்ன? எம்பேச்சைத் தட்டுவாங்களா? நாம் பாத்து இது செரியில்லைன்னா கேக்கும் திற உறுதி இருக்குது? என்னமோ இப்போ போயிட்டாங்க. வெடிஞ்சா வாராங்க' இப்படி எண்ணும்போதே, கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும், அந்த விடு சூளைகளும் அர்ந்தங் கெட்ட மணியக் காரனும் என்ன பண்ணுவாங்களோ என்ற நினைவு வரும்.

"சரி என்ன வந்தாலும் இந்தக் கட்டை அதரவா போகுது? எங்க அப்பன் காலத்தில் அவர் ஒருத்தருக்கும் அடங்கி நடந்தவரல்ல. இந்த மணியக்காரனும் சித்தப்பனும், பெரியப்பனும் மண்ணுக் கவ்வின வங்க தானே! ஒரு கை பாக்கிறது" என்று திடம் செய்து கொண்டான்.

அப்பொழுது முத்தாயா என்னவோ தூக்கத்தில் உளறினாள். ராமாயியும் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்திருப்பதைப் பார்த்து ஐயோ! சாமத்துக்கு மேலாகுது. ஏன் முழிச்சிட்டு இருக்கீங்க? என்றாள்.

'இப்ப பலபலன்னு வெடிஞ்சுபோயி நிலம் தெரியுது. தோட்டம் போக வேண்டாமா? என்றான் சின்னப்பன். ஆனால் சிரிப்பை அவனால் அடக்க முடியவில்லை.

ராமாயி கண்டுகொண்டாள். கண்ணைத் துடைத்துக் கொண்டு "என்ன சத்தம் ஊரடங்கலியா? என்றாள். "இந்தா அரகமா பேசாதே. அப்புறம் விருந்துக்காரர் ஊட்டிலிருந்து ஆள் வந்தாலும் வரும்."

"ஓ அதுதான் சாம்பலடங்கிலப் போலிருக்குது. நா மறந்தே மறந்திட்டனுங்களே! ஆனா நீங்கதா சோறு உங்கப் போயிட்டு வரப்படா துங்களா?

'நா என்னத்துக்கு அங்கு போறன். வேணும்னா முய்யக் குடுத்துட்டா போகுது."

'ஆரு ராமாயாளா இந்த நேரத்தில் பேசறது?' என்று பக்கத்து வீட்டுக்காரி சுவற்றிற்கு அந்தப் புறத்திலிருந்தபடியே கேட்டாள்.

நாங்க என்னக்கா பேசறம்? இத்தனை நேரம் நானும் தூங்கிட்டுத் தான் இருந்தேன், இந்தப் பொழயா தூங்கிட்டுத்தான் இருந்தே இந்தப் பொழயா தூக்கமொண்ணு......... என்று கூறிச் சிரித்தாள்.

அவள் சிநேகிதையும் சிரித்துக் கொண்டே, 'ஆமாம் எங்காயா நாகம்மாளைக் கண்ணிலே பாப்பமின்னா காணமே," என்றாள். நடந்த விஷயம் ஒன்றும் இன்னும் அவள் காதுக்கு எட்டவில்லை.

தன் கணவன் பக்கத்தில் இல்லாதிருந்தால் ராமாயியும் சங்கதியைச் சொல்லியிருப்பாள் இப்போது அதையெல்லாம் சொல்லத் தருணமில்லை. 'எப்படியோ உம் மவள் ஒடம்பு நல்லானாச் செரி' என்று ஒருவிதமாகப் பேச்சை முடித்தாள்.

## 27

தூங்கப்போ" என்று மணியக்காரர் கெட்டியப்பனிடம் சொல்லும் போதே, இன்றைக்குத் தூக்கமேது? என்று அவன் தன்னுள் எண்ணிக் கொண்டான். ஆனால் அதை யாரிடமும் சொல்லவில்லை. .இதோ அப்படியே என அங்கிருந்து கிளம்பினான்.

எங்கும் ஒரே இருள். மயிர் பிடித்தால் மயிர் தெரியாத அவ்வளவு இருட்டு கரடுமுரனான ஆற்றங்கரைத் திட்டுகளைத் தாண்டி கெட்டியப்பன் தன் திசை நோக்கிப் போய்க் கொண்டிருந்தான். மேலே போத்தியிருந்த துப்பட்டியை எடுத்து உருமாலாகத் தலையில் சுற்றிக்கொண்டு "ஊர் கூடிச் செக்குதள்ளுகிறதாம். ஊதிவிட்டால் விழுகிற நோஞ்சானைத் தொலைக்க என் கையில் இருக்கிறது மருந்து" என்று வாய்விட்டுச் சொன்னான். யாராவது அக்கம் பக்கம் இருக்கிறார்களா என்று சுற்றிலும் ஒரு முறை பார்த்தான். அந்த மையிருட்டில் செடி, கொடிகளின் சாயல்தான் தெரிந்தது. பழைய பத்திய முறையை அனுசரித்து மருந்து கொடுக் கிறானா அல்லது சாஸ்திரத்தைக் கையாள்கிறானா என்பதைப் பொறுத் திருந்து பார்ப்போம்.

இரண்டொரு இடத்தில் சேறு வழுக்கி விட்டதையும் குழிகளில் கால் இடறியதையும் சமாளித்துக் கொண்டு நனைந்துபோன கால்

செருப்பைக் கழற்றித் தூர எறிந்துவிட்டுக் குடிசை போய்ச் சேர்ந்தான். இவனை எதிர்பார்த்துக் கொண்டு இரண்டுபேர் அங்கே காத்திருந்தார்கள்.

இவனைக் கண்டதும், அடெ, "என்னப்பா நம்பினா பெரிய கல்லாத் தூக்கிக் கொடுத்துடுவாய் போலிருக்குதே. என்னேரம் வரச்சொன்னது இப்போ வந்திருக்கிறாய்?" என்று ஒருவன் சொன்னான்.

இன்னொருவன் "குடிக்கத் தண்ணி கேட்டா குளிப்பாட்டக் கொண்டு வருவான். சாமி சக்தி பூசாரிக்குத் தெரியாதா? வெறும் பேச்சுப் பேசுற தைவிட காரியத்தைப் பார்ப்போம்" என்றான். "சரிசரி ஆமாப்பா' என்று கெட்டியப்பன் சொல்லி அவர்களுக்கு முன்னால் தானே வழிகாட்டிப் போவதிலிருந்து அவனுக்கு முன்பே விஷயம் தெரிந்திருக்க வேண்டும்.

"ஆறிப்போனா ருசிப்படாது எல்லாம் சுடச்சுட பாத்துடோணும்" என்றான் ஒருவன்.

"என்ன கேட்டீணா, அவெ தனியா அங்கே காவலுக்கு இருக் கிறான். ஒவ்வொண்ணா பதம் பாத்து சரிக்கட்டிட்டால்? என்று மற்றவன் சொன்னான். அவென உசிரோடு புதைச்சுட மாட்டேன். "சரி எவனாச்சு முழிச்சுக்கிட்டிருக்கப் போறான். அங்கே போய்ப் பேசிடலாம்" என்று கெட்டியப்பன் சொல்லவும் சம்பாஷணை அடங்கிற்று.

காலடிச் சத்தம் கூடப் பலமாகக் கேட்காமல் நடந்து மூவரும் மடுவுத் தோப்புக்குள் நுழைந்து விட்டார்கள், அடிக்கு அடி பின்னிக்கிடந்த மரம், செடி, கொடிகளுக்கிடையே தங்குதடையின்றிச் சாதாரணமாகச் சென்று ஒரு பாழடைந்த கிணற்று மேட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். அந்தக் கிணறு ரொம்ப ஆழமில்லை. சும்மா பத்து அடி தானிருக்கும். ஆனால் அந்த இருட்டில் வகை தெரியாமல் உள்ளே சிக்கிக் கொண்டால் ஊனமின்றிக் கரையேறுவது அவரவர் அதிஷ்டத்தைப் பொறுத்ததே. அதற்குச் சற்றித் தள்ளி ஒதுக்கமான ஓரிடத்தில் கொஞ்சம் வெளிச்சம் தெரிந்தது.

“அதோ அங்குதா! என்று ஒருவன் கை நீட்டினான். ‘ஆமா கிணற்றுப்புறா மாதிரி பொட பொடவென முழிச்சுக்கிட்டு உக்காந் திருக்கிறான் பாரு. “ஏண்டா டேய்! என்று கொஞ்சம் உற்சாகமாகவே கத்திவிட்டு” மிச்சம் இருக்குதா இல்லையா? எல்லாம் சுருட்டி வாய்க்குள் போட்டுக் கிட்டாயா? என்றான் கெட்டியப்பன்.

“போனது போக இருக்கிறது மிச்சம்” என்று தன்னிடம் வந்த விருந்தினர்களை உபசரித்தான் அங்கிருந்த மரியாதை தெரிந்தவன்.

மூன்று பேரும் உட்கார்ந்தனர்.

‘சரக்குத் தயார் தானப்பா என்று அங்கிருந்தவன் கூறிக்கொண்டே கலயங்களை எடுத்து வந்தான். புதிதாக அப்போதுதான் இறக்கிய தென்னங்கள்ளு ‘சொய்’ என்ற சப்தத்துடன் நுரை மிதக்க நின்றது. அதைக் கண்டதும் ஆலாக ஒருவன் அப்படியே கலயத்தோடு தூக்கினான்.

“என்னடா வெறி எடுத்தவனாய் இருக்கிறாய். முதலில் இது முடியட்டும்” என்று பானையோடு வறுவல் வகைகளை அவன் எடுத்து வைத்தான்.

‘பனங்கொட்டை ஒண்ணும் இல்லையா?” என்று பானம் செய்ய பண்டம் விசாரித்தவாறே கெட்டியப்பன் ஆகாராதிகளைச் சுவைக்கத் தொடங்கினான்.

அன்றைக்கு அங்கு நடந்த கோலாகலங்களை எல்லாம் வர்ணிக்க முடியாது அடடா! துண்டுக் கறியும், ஒவ்வொருவாய் மதுவும் உள்ளே செல்லும்போது அவர்களுக்கு இந்த லோகத்தில் இருக்கிறோம் என்ற நினைப்பே இருக்கவில்லை.

வெகு நேரம் கொண்டாட்டம் போட்டபிறகு இன்பச் சுற்று சுற்றன பின் மூன்று பேரும் தலை சாய்ந்தனர். மயக்கத்தில் அவர்கள் இந்த வெறும் நிலத்தில் கண் மூடினார்கள். ரோஜாப்பூ மெத்தை அளித்திருந்தால் கூட நித்திரைக்கு லாயக்குப் படாதென்று தள்ளியிருப்பார்களென்று நினைக்கிறேன்.

இத்தனை அமளிதுமளிகளிலும் கெட்டியப்பன் நினைவு தவறாது மிதமாகவே இருந்தான். கண்கள் மட்டும் திரண்டு செஞ்சிவப்பாயிருந்தன. சிறு குழந்தைகள் கண்டால் நிச்சயம் பயந்து விடும்.

"என்னடா விடிஞ்சிட்டுதா?" என்று தன்னோடு உட்கார்ந்திருக்கும் செங்காளியிடம் கெட்டியப்பன் கேட்டான்.

செங்காளி பொட்டென்று கைத்தடியை ஊன்றி எழுந்து பார்த்துவிட்டு, "இப்போதுதா கெழக்கு வெளுக்கிறது. ஆச்சு விடுயற சமயந்தா' என்றான்.

அப்போ ஒரு காகம் 'கா' என்று கத்தியது. 'அடே கோழி கூப்பி டுதே' என்று எழுந்தான் கெட்டியப்பன். எங்கே வயிற்றுக்குள் இருந்தா? இன்னும் சரியா செரிக்கலை போலிருக்கிறது? என்று காளி சிரித்தான். நீயும் வா என்று கெட்டியப்பன் சொல்லிக் கொண்டே நடந்தான். எங்கே என்று கேட்காமலே "நம்ம ஆசாமிகளின் தூக்கம் கலைவது எப்போது." என்று கேட்டுக் கொண்டே செங்காளியும் பின் தொடர்ந்தான். வேறு விஷயங்களில் மற்றவர்களுடன் கெட்டியப்பன் எவ்வளவு தூரம் தொடர்பு வைத்துக் கொண்டாலும் ஏதாவது அந்தரங்க காரியமாயிருந்தால் செங்காளியைத்தான் தன்னோடு இட்டுச் செல்வான். செங்காளியும் குரு வுக்கு ஏற்ற உத்தம சிஷ்யனாகவே இருந்தான். சாமிமாடு போல அவன் வஞ்சகமின்றி வளர்ந்திருந்தான். பனைமரத்து அடிக்கட்டை போல இருக்கும் அவன் தேகம். ஊரார் சொத்தைத் தின்றே சேகேடுயிருந்தது.

'தடி பத்திரம்' என்று மட்டும் கெட்டியப்பன் சொன்னான். அவன் கால்கள் நேராகப் போக மறுத்தன. கட்டைகளில் மோதிக்கொண்டன. பள்ளங்களில் கிணுக்கென இறங்கினான். 'என்ன தடம் தெரியலயா?" என்று கேட்டதையும் கவனியாது ஆற்றுக்குச் செல்லும் இட்டேறியில் இறங்கினான் கெட்டியப்பன்.

செங்காளிக்கும் கொஞ்சம் மசமசப்பாகத்தான் இருந்தது. இருந்தாலும் தடுமாறாது பின் நடந்தான். மிருதுவான கூதல் அடித்துக் கொண்டிருந்தது. பட்டிகளிலிருந்து உடம்பை உதறிக் கொண்டே பண்டம்

பாடிகள் வெளிக்கிளம்பின. எங்கோ இரண்டொரு நாய்களின் அர்த்தமற்ற குரைப்புச் சத்தத்தோடு ஆட்டுக்குட்டிகளின் 'ம்மா' வென்ற சப்தமும் சுருதி லயமாகக் கலந்தன. அவர்கள் இருவரும் தோப்பைக் கடந்து ஆற்றுமணல் தாண்டி ஊரடியில் உள்ள சின்னப்பன் தோட்டத்து வேலி வந்து சேர்ந்தனர். கெட்டியப்பன் கையிலிருந்த கழியால் வேலியை ஓங்கி ஒரு தட்டுத் தட்டினான். வேலி முட்கள் சிதறின. உள்ளே போகப் பெரிய வழி ஏற்பட்டது. அந்தப்பக்கமாகத் தடம் இருக்கும் போது இது எதற்கு? என்றான் செங்காளி. அந்த முட்களை சீராக எடுத்து வைக்கக் குனிந்தான். கெட்டியப்பன் திரும்பி "வேறே வேலெ இல்லெ? காலத்தாலே வேலி நடத்தா இங்கே வந்தமா? அங்கே பாரு கெணத்தோரம் ரொம்ப கூட்டமா இருக்குதா" என்றான்.

செங்காளி பார்த்துவிட்டு "சரியாகத் தெரியலே ஆனா ஆரொ நிக்கிறாப் போலிருக்குறது. என்ன நாகம்மா சங்கதியா?" என்றான்.

"ஆமா அந்தப் தொல்லைக்குத்தா நா போறேன்." என்றான்.

மணியக்காரர் வீட்டில் ஆலோசித்ததைப் போலவே நாகம்மாள் காலையில் போரைத் தொடுத்து விட்டாள். தோட்டத்தில் காலையில் ஏற்றுப்பிடிக்க வந்த சின்னப்பனைத் தடுத்து விட்டாள். தொல்லை ஆரம்பமாகி விட்டது.

இவர்கள் கிட்ட நெருங்க நெருங்க சின்னப்பன் கடுமையாக அதட்டிப் பேசிக்கொண்டிருப்பது கேட்டது.

உங் கையெக்காலெ முறிச்சிருப்பே, எனக்கு வந்த கோவத்தை அடக்கிட்டே! ஓடிப்போ எம் முன்னால் நிக்காதே! என்றான் சினத்தோடு.

"என்ன நானா ஓடறது? தலை துண்டாத்தா போவட்டுமே!" என்றாள் நாகம்மாள்.

'அவ்வளவு குண்டித்தைரியமா உனக்கு?" அப்படீனா இண்ணக்கி அடி தடிக்கினே ஆளுகளையும் வரச்சொல்லி இருக்கிறாயா? ஒரு கை

பாத்துட்டுத்தாம் போக உத்தேசமா? என்று சின்னப்பன் படபடவெனப் பேசிக்கொண்டே பின்னால் திரும்பினான்.

அவன் சொல்லியவாறே வந்தவர்களைப் போன்று கெட்டியப்பனும், செங்காளியும் காட்சியளித்தார்கள்.

அவர்கள் இருவரையும் கண்டதும் நாகம்மாளுக்கு மனம் 'பகீர்' என்றது. என்னவோ முன் எப்பொழுதும் கண்டிராத ஒரு அதிர்ச்சி அவள் தேகத்தை நடுக்கியது. எதிரில் நின்றுகொண்டிருந்த சின்னப்பனை யும், அவனுக்குத் பின்னால் பனங்கருக்கோரத்தில் முத்தாயியை இடுப்பில் வைத்துக்கொண்டிருந்த ராமாயியையும், ஏக காலத்தில் பார்த்தாள். தன்னையே ஒருதரம் மேலும் கீழும் பார்த்துக் கொண்டாள். அவள் கட்டியிருந்த தூ வெள்ளைக் காடாப்புடவை காற்றில் படபடவென அடித்தது. அந்தப் புடவைக்கும் சின்னப்பனுக்கும் ஏதோ ஒரு சம்பந்தம் இருப்பது போலப்பட்டது. ஆமாம்! அன்று தாலி வாங்கினபோது 'பிறந்திடத்துக்குக் கோடி' அவளுக்குச் சுற்றினபோது அருகில் நின்றுகொண்டிருந்த சின்னப்பன் கதறியது அவளுக்கு அப்போது ஞாபகம் வந்திருக்கலாம். அவளால் ஒருவரையும் ஏறெடுத்துப் பார்க்க முடியவில்லை.

சின்னப்பனுக்கு அடங்காத கோபம் வந்தது. பனம் கருக்கு ஓரம் நின்றுகொண்டிருந்த தன் மனைவியை 'இங்குவா' என அழைத்தான். நல்ல நாளிலேயே பலமாகப் பேசாதவள் இவைகளைக் கண்டதும் பதுமைபோல் மௌனமாகிவிட்டாள். இடுப்பிலிருந்த குழந்தை கீழே இறங்க முயற்சித்தது.

சின்னப்பன் உக்கிரமாக், "நீங்க ரண்டுபேரும் அவ சிபாரிசுக்கு வந்த சிப்பாய்களா செரியான காணியாளனுக்கு பொறந்தவங்க தானா? என்று ஆத்திரத்துடன் வந்தவர்களைப் பார்த்துக் கேட்டான்.

அப்போதும் அவன் வேகம் தணியவில்லை. .இரண்டடி முன் வந்து... இங்கே ஒருகணம் நின்னுக் கிட்டிருந்தீங்கன்னா, அப்புறம் என்ன நடக்குமினு தெரியாது! என்றான். பிறகு சற்று நிதானித்து செங்காளியைப்

பார்த்து, "அட, முண்டப்பயெ செங்காளி மூனாட்டுக்குப் பங்காளி" ன்னு செலவாந்திரம் சொல்லுவாங்க, உனுக்கு இவ்விடத்திலே என்னடா வேலெ?

செங்காளிக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான்.

ஆனால் கெட்டியப்பன் கையிலிருந்த தடியைப் பிடுங்கிக் கொண்டு, இப்போ என்ன சொன்னாய்! என்ன நடந்திடும்? என்று விரைப்பாகக் கேட்டுக்கொண்டே முன்னால் போனான்.

"மண்டெக் கிறுக்கு எடுத்துடுதா? நீ வருகிற விசையைப் பார்த்தா உனக்குப் போங்காலம் தட்டீட்டது போலிருக்குது" என்று சின்னப்பன் மடிக்குள் கையை விட்டான்.

நிலைமை எக்க சக்கமாய் விட்டதால் பயமுறுத்தத்தானோ என்னவோ சின்னப்பன் கத்தி எடுக்கப் போகிறேன் என்று நினைத்துச் செங்காளி. "கெட்டீனா இந்தா, நில்லு, நில்லு, அவசரப்படாதே என்று கூறி அவன் கையிலிருந்த தடியைப் பிடுங்கப் போனான். ஆனால் அதற்குள் காரியம் மிஞ்சிவிட்டது. கெட்டியப்பன் தன் கைத்தடியால் 'மடா' வென்று ஓங்கி சின்னப்பன் தலையில் அடித்து விட்டான். அந்த அடியின் வேகத்தால் தடிகூட சின்னாபின்னமாக முறிந்து விட்டது.

சின்னப்பன் நிலைமை கொள்ளாது பூமியில் சாய்ந்தான். சிரசினின்றும் ரத்தம் மளமளவென்று பெருகியது. சித்திரை வெயிலில் சோரும் வாழைக் குருத்தைப்போல அவன் அங்கங்கள் சுருங்கின. முதலில் சுவாசம் பலமாகி பின் மெதுவாக அடங்கிற்று. குழந்தை 'கீச்' செனக் கத்தி ராமாயியைத் தழுவிற்று. ராமாயி ஹோ வெனக் கதறிக்கொண்டு சின்னப்பன்மேல் விழுந்தாள்.

முற்றும்

## நாகம்மாள் நாவல் பற்றிய ஒரு நோக்கு

புனைகதை இலக்கிய வகைகளில் ஒன்றாகிய ''நாகம்மாள்'' என்ற நாவல் தமிழ்நாட்டைச் சேர்ந்த பிரபல எழுத்தாளர் ஆர். ஷண்முகசுந்தரம் அவர்களால் எழுதப்பட்டது. தமிழ்பேசும் மக்களைப் பொறுத்தமட்டில் தமிழ்நாட்டில் மணிக்கொடி காலம் என்பது மனிதாபிமானம், தேசாபிமானம், தன்மானம் வேண்டி மக்கள் புரட்சிக்கொடி ஏந்திய காலம்.இக் காலத்தில் அந்நிய ஆதிக்கத்துக்கு எதிராக நாட்டின் சுதந்திரத்தை வேண்டிப் பல்வேறு நாவல்கள், சிறுகதைகள் எழுந்துள்ளன. இக் காலத்திலேயே ''நாகம்மாள்'' நாவல் 1942 ஆம் ஆண்டு ஆசிரியர் ஆர்.ஷண்முகசுந்தரம் அவர்களால் எழுதப்பட்டது.

இந் நாவல் கிராமியக் குடும்பங்களுக்கிடையிலான வாழ்வியல் அம்சங்களை, அவ்விடத்தின் மண்வாசனை பிசகாது எடுத்துக் காட்டுகிறது. இந் நாவலாசியர் அறுவடை [1960], மனநிழல் [1967], வரவேற்பு [1969] போன்ற பல்வேறு நாவல்களை எழுதியவர். பல்வேறு நாவல்களைத் தமிழில் மொழிபெயர்த்தவர். இவரது அனுபவமும், உள்ளத்தில் எழுந்து நின்ற ஆக்க சிந்தனையின் பிரதிபலிப்பும் நாவல் இலக்கியமான நாகம்மாளை ஆக்க வைத்து எனலாம்.

இந் நாவலின் சிறப்புக்கு ஊன்றுகோலாக அவர் கையாண்ட பல்வேறு நாவல் இலக்கிய உத்திகளை இங்கு நோக்குவது பொருத்தமாக அமையும். இதனாலேயே சிறந்தவொரு கதையைச் சொல்ல நாவலாசிரியரால் முடிந்தது எனலாம்.

இந்நாவல் காலமாற்றங்களினால் சிதறடிக்கப்படாது நீண்ட கால வாழ்வுக்கு உரமூட்டியது யதார்த்தத்தை எதிர் கூறிவைத்தமையே ஆகும்.

❖ நாகம்மாள் வாழும் சிற்றூரைச் இயற்கையுணர்வுடன் யதார்த்தமாகச் சித்திரிக்கும் பாங்கு. [கோயில் திருவிழா, பொங்கல், மரம் செடி கொடி, நம்பிக்கைகள்]

- ❖ விவசாயக் குடும்பத்தில் நிகழும் செயற்பாடுகள், நம்பிக்கைகள், வாழ்வியல் அம்சங்களை உயிரோட்டமாகக் கதைகூறல். [வயலில் ஏற்றம் இறைத்தல், உழவு, விதைத்தல், சகுனம் பார்த்தல்]

- ❖ கணவனை இழந்த விதவையாக நாகம்மாளை நிறுத்தி அவளது செயற்பாடுகளையும், எண்ணங்களையும் உள்ளக் குமுறல்களையும் காட்டும் விதம்.

- ❖ ஆங்காங்கே கதையை வளர்த்துச் செல்லவும், கதைப் பின்னலுக்காகவும் இடையிடையே வந்து செல்லும் பல் வகைக் கதைமாந்தர்கள்.

- ❖ கிராமியப் பேச்சு மொழியை மண்வாசனை சற்றும் குறையாது யதார்த்தம் தோன்றக் கூறும் சிறப்பு.

- ❖ மக்களிடையே பிரச்சினைக்கு முக்கிய இடம் வகித்து நிற்கும் 'சொத்து' என்ற பிரச்சினையை முதன்மைப்படுத்தி அதனைப் பாகம்போட விரும்பும் நாகம்மாளை வெளிப்படையாகக் காட்டுவதன் மூலம், இந்தியமண் பிரிக்கப்படுவதைக் கதைமூலம் உள்ளாந்தரமாக எடுத்துக் காட்டும் ஒரு துன்பியல் அடாவடித்தனத்தை நாவலூடாக எடுத்து காட்டும்போக்கு.

- ❖ தாய்நாடு கூறுகளாகப் பாகம் பிரிக்கப்படுவதால் ஏற்படும் தாக்கங்கள் இறுதியில் யுத்தத்திலும், இறப்பிலும் முடியும் என்பதைச் சின்னப்பன் தாக்கப்பட்டு இரத்தக் களரியில் இறந்தமையைக் கூறும் விதத்தால் கதை சொல்லும் சிறப்பு.

- ❖ யதார்த்தத்தைச் சுமார் 60 வருடங்களுக்கு முன்பே எதிர்வு கூறி வைத்த போக்கு இன்று இந்திய மண் கூறாகப் பிரிக்கப்படவும், எல்லைதாண்டிய பயங்கரவாதம் ஏற்படுவதை அன்று உள்ளாந்தரமாகக் கதை கூறிவைத்த சிறப்பும், நாகம்மாள் சொத்துக்கு ஆசைப்படுவதையும், சின்னப்பனின் பாதுகாவலை மறந்து, கெட்டியப்பனுடன் கொண்டுள்ள தொடர்புகள் காட்டப்படும் விதம், போக்கு.

- ❖ பாகத்தைப் பிரித்துக் கேட்டும் நாகம்மாளுக்குப் பக்கபலமாக நிற்கும் கெட்டியப்பனையும், அவர்களுக்கிடையிலான இரகசியத் தொடர்புகளும், செயற்பாடுகளும் காட்டும் விதம்.

- ❖ ஆசிரியர் ஆர். ஷண்முகசுந்தரம் அவர்கள் இந்நாவலை எழுதிய காலம் ஆங்கிலேயரின் ஆட்சியில் தேசிய விடுதலை இயக்கங்கள் பொங்கி எழுந்து பாரதநாடு கூறுபோடப்படுவதை எதிர்த்த காலம். எனவேதான் சதித் திட்டம் போடுபவர்களை எடுத்துக் காட்டுவதையும், பிரச்சினை இன்றிக்கிடக்கும் குடும்பங்களைப் பிரச்சனைக்கு உட்படுத்தித் துன்பமயமாக்கும் குடும்பக் கதை ஒன்றைக் கூறிவைப்பத்தன் மூலம் பாரத நாடு கூறுபோடப்படாமல் இருக்கவேண்டும் என்ற ஆசிரியரின் உள்ளத்தின் வாஞ்சையைக் காட்டுதல், மக்களை எச்சரிக்கையாக இருக்கத் தூண்டுதல் போன்ற உத்திகள் இந் நாவலுக்குப் பொருத்தப்பாடாகக் காட்டும் சிறப்புகள் உடையது எனலாம்.

இவ்வகையில் நோக்கும்போது 'நாகம்மாள்' நாவலை உயிரோட்டமாக நடத்திசென்றது மட்டுமன்றித், தான் கூறவந்த செய்தியை, புத்திமதியை, அறிவுறுத்தலைக் கதை சொல்லும் முறையால் விளங்க வைத்து **''நிலம் பிரிக்கப் படுவதால் ஏற்படும் துன்பியல் அவலங்களை யதார்த்தமாக எதிர்வு கூறிய பெருமை எச்சரிக்கை''** என்பன இந் நாவலாசியரின் சிறப்புக்கு, நாவலின் சிறப்புக்கு எடுத்துக் காட்டாக அமைகிறது.

**கதையை வளர்த்துச் செல்லும் கதைமாந்தர்களிலே ஒரு சிலரின் பண்புகளை இங்கு நோக்குதல் சிறப்பாக அமையும்.**

**நாகம்மாள்**

- ❖ கணவனை இழந்து விதவையாக வாழ்ந்த பொழுதும் குடும்பப்பொறுப்பு, வயல் வேலைகளைச் செய்து முடிக்க வேண்டும் என்ற நல்ல மனோநிலை காணப்படுபவள்.
- ❖ தன் குடும்பம்போல் சின்னப்பன் குடும்பமும் வாழவேண்டு மென உழைத்தவள்.

- ❖ பிறரது பசப்புவார்த்தைகளை இலகுவில் நம்பக்கூடியவள்
- ❖ நிலத்தில் தனது பாகத்தைப் பிரித்துத்தரும்படி சின்னப் பனைக் கேட்டவள். இது சின்னப்பன் செய்த உதவி களையும்,அவளது பாதுகாவலனாக இருந்த சின்னப்பனுக்கு ஒரு சவாலாகவும், அவள் செய்ந்நன்றி மறந்தவளாகவும் காணப்படல்.
- ❖ கெட்டியப்பனுக்கும், இவளுக்கும் உள்ள தொடர்புகள் கதையைக் கொண்டு செல்லவும், கதைப்பின்னலுக்காகவும் ஆசிரியர் கையாண்டபோதும், **நாகம்மாள்** என்ற பாத்திரத்தை நோக்கும்போது சின்னப்பனுக்கே நீண்டகாலம் தெரியாது இருந்தபோதும், இத்தொடர்பு அவள் தான் விதவை என்பதை மறந்து நடத்து கொண்ட தவறான போக்குக் கொண்டவள்.
- ❖ குழந்தை முத்தாயியைக்கூட சின்னப்பன் குடும்பமே பார்க்கிறது எனக் கூறுமுகத்தால், நாகம்மாளின் நன்றி மறந்த நிலை, குடும்பம் பொறுப்பற்று கேட்பார் சொற் கேட்டு நடப்பவளாகக் காட்டப்படல்.
- ❖ பிறர்கதைகளை அறியவேண்டும் என்ற ஆசை கொண்டவள். ''நாகம்மாள் துருவித்துருவிக் கேட்டாள்''
- ❖ இந்த பரந்து கிடக்கும் காட்டிலும் தோட்டத்திலும் தன் கணவனுக்குச் சேர வேண்டிய பாகம் பாதி இல்லையா? இங்கு சின்னப்பன் செய்த உதவிகளை, பாதுகாப்புகளை மறந்து சொத்துக்கு ஆசைப்படும் போக்குக் கொண்டவள்.
- ❖ பிறருக்கு அடங்கி நடக்கும்போக்கு இல்லாதவள், தயவும், பயமும் எதுவென அறியமாட்டாதவள். [அவள் ஒரு ராணிபோல் நடந்து வந்திருக்கிறாள்].

- ❖ விதவையாகக் காட்டப்படும் நாகம்மாள் தனது நிலையறிந்து பழைமையை எண்ணி வாழ வேண்டியவள். சொத்தின் பாகம் கேட்டு, பிறர் சொற்கேட்டுப் பிரச்சினையை உண்டாக்கும் ஒரு அடாவடித்தனம் கொண்டவள்.
- ❖ சொத்துப் பிரிவினைக்குத் தூபம்போடும் கெட்டியப்பனின் தகாத உறவு அவளது பிரச்சனைக்குப் பக்கபலமாக மாறுகிறது. இது தனது குடும்ப உயிருக்கே உலைவைக்கிறது. இதற்குக் காரணமான மனோபாவமே அவள் கொண்டிருந்தாள்

**சின்னப்பன்**

- ❖ தனது அண்ணன் இறப்புக்குப்பின் நாகம்மாளைத் தன் சகோதரிபோல் பாதுகாத்து வந்த பெருமைக்குரியவன்.
- ❖ குடும்பப் பொறுப்புகளைச்சுமந்து நிற்பவன். நாகம்மாள்மீது பலர் பலவாறாகக் கதைத்தபொழுதும் அது பற்றி நம்பாது நாகம்மாள் மீது நல்ல மதிப்பு வைத்திருந்தவன்.
- ❖ பிறரின் ஏமாற்றுக்கும் கதைகளுக்கும் உட்பட்ட நாகம்மாள் தனக்கு எதிராக சொத்தைப் பாகம் பண்ணிக் கேட்கிறாள் என்பதிலிருந்து கோபப்பட்ட பாத்திரமாக மாறிக் காணப் படல்.
- ❖ அண்ணனின் சொத்தைத் தான் வைத்திருக்க வேண்டு மென எண்ணுகின்ற உள்ளம் கொண்டவன். அதாவது நிலத்தைப் பாகம் செய்யாது கூட்டுக்குடும்ப வாழ்க்கையை விரும்பும் எண்ணமுடையவன். சொத்துக்கள் பிரிக்கப் பட்டால் உறவுகளுக்கிடையிலான தொடர்புகள் அகன்று விடும் என்ற உள்ளமுடையவன்.
- ❖ அடிக்கடி கோபப்படும் பாத்திரம் [தனது மனைவி ராமாயிடம் அவன் அடிக்கடி கோபத்துடன் உரையாடல்]
- ❖ எவ்வளவு பிரச்சினை ஏற்பட்டபோதும் நாகம்மாளின் குழந்தையைப் பாதுகாக்கும் நல்உள்ளம் உடையவன்.

## கெட்டியப்பன்

- ❖ மதுபோதைக்கு முதன்மை அளிக்கும் உள்ளமுடையவன்.
- ❖ சொத்துக்கள் அனைத்தையும் உண்பதற்கும், குடிப்பதற்கும் கரியாக்கியவன்.
- ❖ நாகம்மாளிடம் இவனின் தொடர்பானது இறுதியில் பாகத்தைப் பிரித்துக் கேட்க வைப்பதில் தூபம் போடும் போக்குக் கொண்ட உள்ளம் உடையவனாகக் காணப்பட்டான்.
- ❖ பிறரின் குடும்பப் பிரச்சினைகளுள் தலைபோடும் போக்குக் கொண்டவன்.
- ❖ அடாவடித்தனமும், சண்டித்தனமும் கொண்டவன்.
- ❖ அவசர புத்தியுடையவன், தேவையற்ற விடயங்களில் தானே தலைபோடுபவன், அவசரபுத்தியால் பிற உயிரின் மதிப்புத் தெரியாது சின்னப்பனின் உயிரரைக் குடித்த வன்மையாளன்.

